உ

சுகவனம்-சிவப்பிரகாசனார்
இயற்றிய

# குட்டிக்குறள்

[நூற்பா-ஸ]

உரையாளர் :

திரு. கி. வா. ஜகந்நாதன்
திரு. இளவழகனார்



1946

எனது
கலை நலத்திற் பரிவு கொண்ட
இளைய தமையனார்

## சி. இரத்தினவேற் பிள்ளை யவர்களின்

திருவடி மலர்களுக்கு
இந்நூல் உரியது.

சென்னைத் தமிழர் கழகத் தலைவர்

### பி. செ. மா. இளஞ்செழியன்

தந்த

# அணிந்துரை

---

திருக்குறள் தமிழன் பெற்ற கருவூலம்; அக் குறளின் [illegible] குட்டிக்குறள் ஆம்! வாழ்வின் விளக்கம் திருக்குறள்; அக் குறளின் விளக்கம் குட்டிக்குறள். இது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

திருவள்ளுவர் தீந்தமிழ் ஒரு சிந்தனை நிலையம். அது தமிழனைச் சிந்திக்க வைத்தது; தமிழன் சிந்தையைச் சிறைவைக்கவில்லை. அறிவின் ஆழமும், ஆராய்ச்சியின் அமைதியும், உணர்ச்சி வளமும் கெழுமிய உயரிய நூல் அது. மிக உயர்ந்த கருத்துக்களையும் மிக எளிய முறையில் நமக்கு எடுத்துக்காட்டும் கருத்தோவியம் அது. எடுக்க எடுக்கக்குறையாத பொருட்செறிவு அதில் உண்டு. எவ்வளவுக்கெவ்வளவு அதன் பொருளாழம் காண நாம் முனைகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு

அதன் பொருளாழமும் மிகுந்துகொண்டே செல்லும். எட்ட எட்ட எட்டா அடிவானம் எப்போதும் அதில் இருந்துகொண்டே இருக்கும். ஒரே வாக்கியத்தில் சொல்லவேண்டுமானால், நம் உள்ளத் தனையது அதன் உயர்வு. நம் உள்ளம் ஆழ்ந்து செல்லச் செல்ல அந்த அளவிற்குக் குறள் ஓவியத்தின் அழகும் திறமும் மேலும் மேலும் வளர்ந்துகொண்டே போகும்.

திருக்குறளின் எழுத்து, சொல், சொற்றொடர் அத்தனையும் தமிழனைத் தட்டி எழுப்பும் பேராற்றல் வாய்ந்



தவை. ஆனால் அது தமிழனின் தனிச் சொத்து மட்டுமல்ல; உலகத்தின் பொதுச் சொத்து கூட. அது சமய எல்லை கடந்தது; நாட்டு எல்லை கடந்தது; மொழி எல்லையும் கடந்தது. எந் நாட்டாரும் எச் சமயத்தாரும் எம் மொழியாளரும் எத்தகையினரும் ஏற்றிப் போற்றும் பெருமாட்சி அமைந்தது. உண்மையில் அது உலக இலக்கியம். "திருவள்ளுவர் உலகுக்கென்றே பயின்றார். உலகுக்கென்றே வாழ்ந்தார். அதனால் அவர் தம் உள்ளத்தில் உலகம் நின்றது. அவர் உலகமாயினார்; உலகம் அவராயிற்று" என்பர் திரு. வி. க.

ஆனால் ஒன்று. இத்தகைய உயரிய இலக்கியத்தைத் தமிழன் தகுமுறை பயன்படுத்தத் தவறிவிட்டான் என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அது இன்னமும் புலவர்களின் அலமாரிக்கு அழகு செய்யும் பொருளாக உள்ளதே ஒழிய, பரந்துபட்ட சமு

தாயத்தின் பல்வேறு நிறத்தினருக்கும் பயன்படு பொருளாக ஆக்கப்படவில்லை. அதனுடைய ஆழ்ந்த கருத்தும் உயரிய அமைப்பும் இன்னமும் பொது மக்களுக்குப் புதைபொருளே. அதில் அமைந்துள்ள ஆராய்ச்சித் திட்டங்களும் வாழ்க்கை முறைகளும் இன்றுவரை நாட்டு மக்களை அடையவில்லை என்பதை யார் மறுக்க முடியும்?

தமிழர் வாழும் இடமெல்லாம் திருக்குறள் முழக்கம் எழுமானால் தமிழர் வாழ்வு புதுமலர்ச்சி பெறும்; தமிழர் நெஞ்சமும் புத்துலகப் பண்ணையாய்மாறி அமையும். திருக்குறளைப் பரப்பதற்கு ஒரே வழி புதுப்புது துறையில் எளிய வகையில் யாவருக்கும் பயன்படும் நிலையில் அதனை மாற்றி அமைத்து மறுகோலம் செய்



வதே. குட்டிக் குறள் அப்படிப்பட்ட ஒரு புது முயற்சி. ஆகவே அது பெரிதும் வரவேற்கத் தக்கது.

'குட்டிக் குறள' என்னும் இப்புது நூலில் அமைந்த ஒவ்வொரு நூற்பாவும் அறிவிற்கு விருந்து; ஆராய்ச்சிக் குத் திறவுகோல். தொட்டனைத் தூறும் மணற்கேணி அது. அதனைக் கற்றனைத்தூறும் அறிவு.

இதன் சுவைக்கு ஓர் அகப்பை இதோ! திருக்குறள் ஆசிரியர் குழந்தையின் மழலைப் பேச்சை விளக்கும் போது, "குழலினிது யாழினிது என்ப தம் மக்கள் மழலைச் சொற் கேளாதவர்" என்று குறிப்பிட்டார். அக்குறளை இன்னும் குறுக்கவந்த இக் குட்டிக்குறள் ஆசிரியர், "குழலும் யாழும் மழலைமுன் குழைவ" என்று சொல்லிவைத்தார். அக்குறளை இக்குறள் விளக்கும் அருமையைப் பாருங்கள்! கடுகு

சிறுத்தாலும் காரம் சிறுக்கவில்லை அல்லவா! இப்படி இன்னும் எத்தனையோ எடுத்துக் காட்டுகள் தரமுடியும். ஆனால் உங்களுக்கும் நூலுக்கும் இடையே நான் நீண்ட நேரம் நிற்றல் ஆகாது.

குட்டிக் குறள் உங்களை அழைக்கிறது, செல்லுங்கள். பழந்தமிழ் அமுதை அள்ளிப் பருகுங்கள். பிறகு சொல்லுங்கள் ஏழடியால் நடக்கும் குறட்பாவை நான்கடியால் நடக்க வைத்துள்ள ஆசிரியரின் திறமை எவ்வளவு என்பதை!

சென்னை } பி. செ. மா. இளஞ்செழியன்
15-8-46 } தலைவர், சென்னைத் தமிழர் சமுகம்

---

உ

காம்பீலிச் சேர் கருணீகர்

**சேலம்-ப. கு சின்னைய பிள்ளை யவர்களின்**

முதன்மகனாரும், இந்நூலாசிரியரின்

மூத்த தமயனாருமாகிய

மஞ்சாரஹள்ளி கர்ணம், சைவத் திருவாளர்

**சி. குருசுவாமிப் பிள்ளையவர்கள்**

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

---

**விந்தையெனக் கற்றோர் வியக்குந் திருக்குறள்நம்
சிந்தையுறக் குட்டிக்குறள் செய்தான்—எந்தை
தவப்பயனுற் றேன்றுந் தமிழா சிரியன்
சிவப்பிரகா சக்கவிஞன் தேர்ந்து.**

இதன்பொருள் :

கற்றோர்—அறம்பொருளின்ப நூற்களைக் கற்றுணர்ந்த பெரியோர்கள், வியக்கும்—மிகச் சிறந்த நூல் இதனினும் வேறுண்டோ என்று மெச்சிக்கொள்ளுகின்ற, திருக்குறள்—தெய்வப புலமைத் திருவள்ளுவனார் திருவாய் மலர்ந்

தருளிய 'முப்பால்' என்னும் திருக்குறள் நூலின் உட்பொருட்களெல்லாம், நம் சிந்தை



உற—நம்மவர்களின் மனதிற் றெளிவாக விளங் கும் வண்ணம், குட்டிக்குறள்—மேற்கண்ட பெருநூல பெற்றெடுத்த வொரு குழந்தை நூல், விந்தை என—இப்படிப்பட்ட இயல் பினையுடைய முதல் நூற் பயனாகத் தோன்

றிய இது மிகவும் புதுமையாமென்று, கற்றோர் கூறும்படி, எந்தை—எமது தந்தையாராகிய கருணீகருலதிலகர் ப. கு. சின்னைய பிள்ளையவர்கள் இயற்றிய, தவப்பயனல் தோன்றும்—புண்ணியத்தின் உருவாக (எனது இளைய தம்பி என)ப் பிறந்த, தமிழ் ஆசிரியன்—தமிழ் மொழிப் புலமை கடாத்தும் ஆசிரியத் தொழிலில் இளைஞருள்ளத்தின் இயல்புகளைப் பலலாண்டுகளா யறிந்த, சிவப்பிரகாசன்—சிவபபிரகாசன் என்னும் இயறபெயரையுடைய, கவிஞன்—தமிழ்ச் செயயுளியற்றும் ஆற்றலைப் பிறபபுரிமைச் செலவமாகப் பெற்ற பேறுடையான், தேர்ந்து-முதனூலை மகவும் ஆராய்ந்து, செய்தான்—தமிழ் காட்டவர் பயன் எய்துமபடி இயற்றித் தந்தான் என்றவாறு.

விளக்கவுரை :—

'திருக்குறள்' என்றதனல் முதல் நூலும், குட்டிக்குறள் என்பதனல் இவ்வழி நூலின் பெய



ரும், தமிழாசிரியன கவிஞன் என்றவதனல் இந் நூலாசிரியரது தகுதியும், நூன்மொழியும், மொழியினது எலலையும் கம் சிந்தை உற என்றவதனல நூற்பயனும், கற்றோர் வியக்கும்

என்றவதனுன் முதனூற் சிறப்பும், விந்தை என என்றவதனுல் இவ்வழிநூற் சிறப்பும், எந்தை தவப்பயன் என்றவதனுல இந் நூலாசிரியரது பிறபபின் அருமையும வரலாறும் பிறவுந் தெரிவிப்பதோடு, இந் நூற் குரியார் 'எம் சிந்தையுற' என்றவதனு லினிப் பயன்பெறப் பயில்வோருமாகப் பாயிர விலக்கணமனைத்தும் விளக்கப்பட்டது. இதனைக கூறியவர் எந்தை தவப்பயனுல் என்றதனுல நூலாசிரியரது தமய னாரம் உயர்வும் முதிர் புலமையும் பெற்று உரிமையுடைமை தெளிவு மககள் பெறும் பயனுகிய நூற்கண் நுவன்ற பொருள் முத னூலுககுவழி நூலாம்கூ அறம பொருளின்ப மென்பதும் பெறரும். இதனுல மொழியும் முதன் நூலும், வழி நுவன்ற நூலும, நூலா சிரியனும், குலமும, நாடும் வாழிய வென்று வாழ்த்திய வாறும் கண்டுகொள்க.

சென்னை. 
27-8-1946

சிவ-மாசிலாமணி,
மாணவன், பச்சையப்பன் கலாசாலை.

# Author's Note:

My aim in presenting THIRU-KURAL in this form is to enable young school going children to acquaint themselves with great ease even in their early years, with the lofty ideas contained in the original.

I have tried my best to convey in these aphorisms the great truths, contained in the original couplets. But I cannot be so preposterous as to claim that I might have done entire justice to the original.

I shall feel obliged to all wellwishers who may offer suggestions for improvement.

If this booklet kindles even in one youngster the desire to study the original, I shall feel justified in my venture.

SALEM
1924

C. SIVAPRAKASAN.

பெற்றோர் நினைவிற்

பெருகுக நலமெலாம்!

# உள்ளுறை

அணிந்துரை

சிறப்புப் பாயிரம்

ஆசிரியர் குறிப்பு

i. நூற்பா—ா [மூலம்]

ii. கி. வா. ஜ. [உரை]

பாயிரம் :

க. கடவுள்

௨. வான்

௩. துறவோர்

௪. அறம்

## இல்லறம் :

௫. இல்லம்

௬. மனைவி

௭. மக்கள்

௮. அன்பு

௯. விருந்து

௰. இன்சொல்

## iii. இளவழகனார் [உரை]

# குட்டிக்குறள்

## [நூற்பா - ௱]

### அறத்துப்பால்

### பாயிரம்

*முதலதிகாரம் : கடவுள்*

உலகுக் கெல்லா மொருபொருள் முதலே.
கற்றதன் பயனங் கடவுளைத் தொழுதல்.
நெஞ்சமர் வாற்றொழி னீடுவாழ் குவரே.
அவற்பதஞ் சாரி னவப்பிறப் பறுமே.
ரு. இருபதம் புகழின் வருவினை யொழிவ
செகநெறி நின்றார் மெய்ந்நிலை நின்றார்.
ஒருவன தடியா ரருமனங் கவலார்.
பிறவாழி நீந்தற் கறவாழி தாள்சேர்.
தலைவனை வணங்காத் தலைதலை யலவே.
ய. இறைவனைச் சேரார் பிறவியுட் சோர்வார்.

உ. வான்

வானே யுலகிற் றானே ரமுதம்.
உணாத்தந் துணவா வுறுவதும் வானே.
வானின் றாயின் யாகிற் கும்மே.
மழையின் றாயி னுழுவா ருழல்வார்.
காப்பது மழிப்பதுங் கனமழை செயலே.
விசும்பின் றுளியாற் பசும்புல் தளிரும்.
நெடுமழை யின்றேற் கடலுஞ் சுவறும்.
வானவர் பூசனை வானமுண் டேற்றான்.
தருமமுந் தவமும் வருமழை யானே.
மழையா லுலக மொழுக்கமு மதினே.

## ௩. துறவோர்

நூலெலாந் தலைமையி னுவலுவ துறவே.
துறந்தார் பெருமை யிறந்தாரி லதிகம்.
இருமைக் கயரும் பெருமையர் துறவோர்.
பொறிபுலன் செலுத்தா வறிவன்மே னிலத்தான்.
ஐந்தவித் தவருக் கிந்திரன் சிறுவன்.
மனிதரிற் பெரியோர் மாட்சியிற் புரிவோர்
ஐம்பூத அறிவினன் றன்பால துலகு.
முனிவரர் பெருமை மறைமொழி காட்டும்.
குணமலை வெகுளி கணமுநில் லாது.
அந்தண ரென்போர் செந்தண்மையாளர்.

## ௪. அறன்

சுதிநிதி யறத்திற் பெரிதெதோ வுயிர்க்கு.
அறன்தரு மாக்கம் பிறதரூஉ நீக்கம்.
என்றனை வறஞ்செயல் சான்றவர் கடமை.
மனமா சின்மை யறம்பிற மாலே.
௩௫. அழுக்கா றாதிய விழுக்கல தறமே.
நாளையென் னுவறம் வேளையி லுதவும்.
எடுப்பவ ரூர்பவர்க் கிடையதே தருமம்.
அறப்பய னாற்றிற் பிறப்பறுக் கும்மே.
அறப்பொரு ளின்பம் புறப்பயன் றுன்பம்.
௪௦. அறிவுளார் விருப்ப மறன்பிறி தவமே.
பாயிரம்-முற்றும்.

## இல்லற வியல்

### ௫. இல்லம்

எனைமூ வர்க்கு மில்லறத் தான்றுணை.
துறந்தவர் வறியா ரிறந்தார்க்கு மவனே.
பிதிரிறை புதியோ ரினத்தனோம் பல்தலை.
பழியஞ்சிப் பாத்தூண் வழியெஞ்ச லில்லை
௪௫. அன்பற னுளதேற் பண்புடைத் தில்லம்.

அறவழி யிலலந் துறவினுட் பெரிது.
தருமவில் லாளி யருந்தவ மீளி.
நோற்பித்து நோற்கு நோன்மைய தில்லம்.
பழியொரீஇ யறத்திற் பட்டதே வாழ்க்கை
நன்னெறி வாழ்க்கையன் முன்னிடுந் தெய்வம்.

## ௬. மனைவி

குணநலஞ்செட்டிமைகொண்டவள்மனைவி
இழிகுண மனைவியே லழிவன மாண்பே.
மனைமாட்சியுளதே லெனைமாட்சியிலதே?
கற்புறு மனைவியின் மற்றெது பேறே?
நன்மனை மொழியாளின் மழை பொழியும்.
தற்கண வன்சொற் றலைக்கையள மனையாள்.
பெண்டிர்தங் காவல திண்டிற லாமே.
கொழுநனைப் பேணிற் றெழுதகர் வானோர்.
நல்லிலா ளில்லையே லில்லையா னடையே.
மனைநலம் மனைவி யணிகலன் றனையர்.

## ௭. மக்கள்

அறிவுடை மகாரிற் பிறிதுபே றில்லை.
நன்மகா ரெழுமையின் றுன்பறுப் பாரே.
அரும்பொருள் தனைய ரவர்பொருள் தமவே.
இளமகா ரளாயகூ ழமுதினு மினிது.
சிறடி யுடல்மொழி செவியுற வின்பம்.

குழலும் யாழும் மழலைமுன் குழைவ.
தந்தைசெய் நன்றி முந்துறாஉம் வென்றி.
மகார்தமிழ்ச் சிறத்தல் மன்பதைக் கினிமை.
மகன்றரு முதவி யெவன்கொ லெனுஞ்சொல்.

## ௩. அன்பு

அன்பினைக் கண்ணீ ரளந்தறி விக்கும்.
என்பையு முதவுவ தன்பின தியல்பு.
உடலுயி ரன்பின் தொடர்பது பயனே.
அன்பரு ளார்வம் நண்புசெய் யும்மே.
இன்புற்ற வாழ்வு மன்புற்ற வழியே.
அறச்சார் பண்பே மறத்தினு மாகும்.
என்பில மான அன்பிலர் தீய்வர்.
அன்பிலா வாழ்வு பாலையிற் றளிர்வே.
அகத்தறு மன்பேற் புறத்துறுப் பெதற்கு
அன்பஃ துயிர்பிற வென்புதோ லுடலே.

## ௪. விருந்து

இருந்தோம்பும் வாழ்க்கை விருந்தோம்பு தற்கே.
விருந்தய லாக மருந்துமா காதே.
விருந்தோம்பு மில்லம் வருந்துமா றில்லை.

நல்விருந் திலவிற் செல்விவந் துள்ளாள்.
அ௫. விருந்தோம்பி லிலதகில் வருத்தாத பலனே.
விருந்துகாப் போனை விரும்புமால வானே
விருந்தினற் பயனசன் வரும்பினை துணையே.
வருவிருந் திகழ்ந்தோ ரம்பொரு ளிழந்தார்.
செல்லததன் வறுமை விருந்தேலாச் சிறுமை.
௯0. நோக்கினை திரியும் மூக்கன விருந்து.

## ௰. இன்சொல்

அன்பனை இவஞ்சனையறுவதே யின்சொல்.
அகமகிழ் வீகையின் முகமலர் வினிது.
அலா முக மினியனோக கசச்சொல தறமே.
இன்சொலான் றுன்ப வின்மையி னீங்கும்.
௯௫. இனியவும் பணிவு மணிகல னென்ப.
அறம்மிகு மினியன வாய்ந்துரை செயினே
நயன்நன்றி யீனும பயனீனு மின்சொல.
சிறுமைதீ ரின்சொல் மறுமையு மினிது.
இன்சொலின் பங்கண் டென்கொலோ
வன்சொல் ?
௱. கனியொரீஇக் காய்கவர் வினியபே சாமை

---

# குட்டிக்குறள்

[நூற்பா - ௱]

அறத்துப்பால்

### க. உலகுக் கெல்லா மொருபொருள் முதலே

இதன்பொருள் :—உலகுக்கு எல்லாம்-எல்லா உலகங்களுக்கும், ஒருபொருளே முதல் - ஒரு பரம்பொருள்தான் முதன்மையானது என்றவாறு.

விளக்கவுரை :—இந்நூல் தமிழிலக்கணப்படி மங்கலமொழியாகிய 'உலகு' என்னும் மொழியால் தொடங்கப் பெறுகின்றது. 'எல்லாம்' என்றமையால் அந்தர் மத்திய பாதலம் என்னும் முத்திறப்பட்ட பதினான்கு உலகங்கட்கும் என்க. 'ஒரு பொருள்' என்பதனால், உலகம் பலவாயிருப்பினும், யாவற்றிற்கும் முதலாவான் ஒருவன் என்பது குறித்தலால், பல பொருளும் தன்வயிற் றோன்றும் பெரும்



பொருள் என்பது உணரப்பட்டது. பொருள்

இதனை வஸ்து என்பர் வடநூலார். பரவஸ்து என்பதும் அது.

உலகம் என்பதே பெரிதாம். அதிலும் பல உலகங்கள் எனிற் பல பொருள்கள் உளவாகும். அவ்வஸ்துக்கள் யாவற்றிற்கும் ஆதாரமான முதல்வன் ஒருவனே என்பது பெறப்படும். இதனாலே பல சமயத்தவரும் கூறும் பரம்பொருள் ஒருவரே என்னும் சமரஸ உணர்ச்சி எழுமாறு அறிக. 'ஏகம் சத் விப்ரா பஹுதா வதந்தி' என்பர் வடமொழியாளர்.

இதனை வேதாந்த, அத்வைத மதங்கட்கியையக் கொள்ளினும் கொள்ளலாம். உலகங்கட்கெல்லாம் ஆதிகாரணனும், சர்வ உலகங்களும் தோற்றும் பொருளும் ஒன்று எனக் கொள்ளின், உலகம் யாவையும் கடவுளில் அடங்கும். அவர் ஒருவர் ஆகலின் அநாதியாயுள்ளது ஒரு பொருளே. அதுவே கடவுள் என்பதும் பெறப்படும். 'ஏக மாத்வி தீயம்' என்னும் கொள்கையும் இதற்குச் சான்று பகரும்.

இனி இதனைச் சித்தாந்த வாயிலாக நோக்குவோமாயின், உலகம் பலவற்றிற்கும் ஒரு

பொருள் முதன்மை - தலைமை-கொண்டுளது என்பதுகொண்டு, உயிர்க் கூட்டங்களாகிய உலகங்கள் தமக்கு ஒரு முதல்வனைக் கொண்டுள என்னும் பொருள் பெறுவோம். அதன் வழி, . உயிரின்மேல் நின்றதுலக மாகலின், பசுவே உலகமென்றும், அதற்குத் தலைவன் பதியென்றும், அவன் பரசிவம் ஒருவனே என்றுங் கொள்ளலாம். 'உலகுயிர்க்கெலாம் பசுபதி யொருமுதல் ஆயின்' [அரிச் - புரா] என்பதும் ஓர்க.

உலகு, உயிர்ப் பொருள் உயிரில் பொருள்களால் நிரம்பியது. அவ் விருதிறப் பொருள்கட்கும் இறைவன் முதலாமென்பது :

" தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே உடலுயிர் தத்துவமாய் நிற்கும்
தானே கடல்மலை யாதியுமாய் நிற்கும்
தானே உலகிற் றலைவனு மாமே"

—திருமந்திரம்.

என்பதாலும் இனிது விளங்கும். ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. இதனால் முதற்

உ, கற்றதன் பயனங் கடவுளைத் தொழுதல்

(இ-ள்.) *கற்றதன் பயன் - நாம் கற்றதனால் ஆகும் பிரயோஜனம், நம் கடவுளை த்தொழுதல்— நமது இறைவனை வணங்குதலாம் என்பது.*

(வி-ரை.) நம் கடவுள் என்றமையால் நமக்கொரு கடவுள் உண்டென்பது போதரும். ஒவ்வொருவரும் தமக்கென ஒரு கடவுள் கொண்டிருப்பின் நம் கடவுள் எனக் கூறலாம். அஃதின்றேற் பொதுப்படக் கடவுள் எனக் கூறிவிடலாம். தமக்கெனக் கொள்ளுங் கடவுள் யார்? அவரே சகுண முகத்தால் அன்பர்கள் வழிபடும் வழிபடுகடவுள் அல்லது உபாஸனா மூர்த்தியாம். எனவே, சகுண உருவ வழிபாடு கற்றதன் பின்னர்க் கொள்ளும் உயர்தரத்த வணக்கம் என்பது பெறப்படும். சகுணவழிபாடு முறையே நிர்க்குண வழிபாட்டையும் ஆன்ம ஞானத்தையும் தரும் என்பது உண்மையாகலின், கல்வியின் பயன் வழிபாட்டில் இறங்குதல் வேண்டுவதென

இதன்கட் கூறிற்றென்க.

இனி, நம் கடவுள் என்றதனால் நமக்குடைமையாம் கடவுள் என்பது போதரும். அதன்



வழி, கடவுட்கும் நமக்கும் இயல்பாய் உறும் பிணிப்பு உணரப்பெறும். 'என்று நீ அன்று நான் உன்னடிமை யல்லவோ' [தாயுமா] என்பதும் இதனை உணர்த்தும் என்க. (2)

௩. நெஞ்சமூர் வாற்றொழி னீடுவாழ் குவரே

(இ-ள்.) நெஞ்சம் ஊர்வான் - அடியாரது மனத்தினிடத்தே செல்பவனை, தொழின் - வணங்கினால், நீடு வாழ்குவர் - நெடுங்காலம் பேரின்ப உலகில் வாழ்வார் என்பதாம்.

(வி-ரை.) வாழ்குவர் என்றதனால் இரண்டுலகத்தும் வாழ்வு பெறுவர் என்னினு மமையும். 'இம்மையே தருஞ் சோறுங் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம் - அம்மையே சிவலோக மாள்வதற் கியாது மையுறவில்லையே' என்பது தேவாரம், ஏ - தேற்றம். (3)

௪. அவற்பதஞ் சாரி னவப்பிறப் பறுமே

(இ - ள்.) அவன் பதம் சாரின் - இறையவ னது தாளை அடையப்பெற்றால், அவம் பிறப்பு அறும் - துன்பம் மலிந்த பிறவி ஒழியும் என் பதாம்.



(வி - ரை.) அவன் என்பது இங்கு கடவுளைக் குறித்து நின்றது, எவரும் அறியாச் சேய்மைக்கண் இருத்தலால். வடமொழி மறையும் 'தத்' எனக் குறிக்கின்றது. தத்-அது.

அவப் பிறப்பு என்றதால் துன்பம் மலிந்தது பிறப்பு என்பது பெறப்படும். அவனுடைய பதம் அடைவார் அவப் பிறப்பறுப்பார் என்பதால், அவர்கட்குப் பிறப்பு துன்பப்படுவதாக அமையாது, அப்பிறப்பை உறினும் இன்பமே பெறுவாரென்க. சுந்தரமூர்த்தியார் அடியாராயினமையின், பிறந்தும் இன்பமே பெற்றார் என்பது ஈண்டுணரற்பாற்று. ஏ - தேற்றம். (4)

ரு. இருபதம் புகழின் வருவினை யொழிவ

(இ - ள்.) இருபதம் புகழின் - இறைவனது இரண்டு திருவடிகளைப் புகழ்ந்தால், வருவினை ஒழிவ - வருகின்ற புண்ணிய பாவங்களாகிய இரண்டு வினைகளும் தீர்ந்துபோவன ஆகும் என்றவாறு.

(வி - ரை.) பாதம் புகழ்ந்தால் இரண்டு வினையும் ஒழியும். அதனால் முறையே இரு

பாயிரம்

வினை யொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆயவை உறும் என்க. அதன் பயனாய் அருள் பெறுவோம். 'என்வினை யொத்தபின், கணக்கிலாத் திருக்கோலநீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே' என்பது திருவாசகம்.

இனி, வருவினை என்பது எதிர் காலத்தைக் குறித்தலால் நாம் அநுபவிக்கும் பிராரர்த்த வினை யொழிந்த மற்றைய சஞ்சித, ஆகாமிய

வினைகள் இனி நம் தலைமேற் சுமத்தப்படுவன ஆகலின், அவைகளைக்கூறும் என்று கொண்டு, கடவுளைப் புகழ்வார்க்கு ஆகாமிய சஞ்சிதங்கள் பற்றாவாம் என்பதுங் கொள்ளலாம். ஏனெனில், பிராரத்துவம் அநுபவித்துக் கழிக்க வேண்டியதே யாதலின் என்க. (5)

௬. செந்நெறி நின்றார் மெய்ந்நிலை நின்றார்

(இ-ள்.) செம்மை நெறி நின்றார் - செம்மையாகிய வழியிற் பிறழாது நிற்பவர்கள், மெய்நிலை நின்றார் - உண்மை நிலையில் நிற்பவர் ஆவார்.

(வி-ரை.) செந்நெறி என்பது வள்ளுவனார் குறித்த 'பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ



ரொழுக்க நெறி' யை உணர்த்தும். அதுவே திருவருள் நெறியாம். திருவருள் நெறியில் நின்றார், திருவருள் என்றும் நிலைபெற்றதாகலின், என்றும் அழிவற்ற சத்திய நிலையில் உறைவார் என்றபடி. (6)

எ. ஒருவன தடியா ரருமனங் கவலார்

(இ-ள்.) ஒருவனது அடியார் - ஒப்பற்ற இறைவனது அன்பர்கள், அரிய மனம் கவலார் - வெல்லுதற்கு அரிய தமது நெஞ்சத்தில் கவலைப்படமாட்டார்கள் என்பதாம்.

(வி-ரை.) ஒருவன் - 'ஈடு மெடுப்புமி லீசன்' [திருவாய்மொழி]. அருமனம் என்பது அருமையான மனம் என்றுங் கொள்ளப்படும்; மற்றையோர் மனம் என்றுந் துன்புறும் மனம் ஆகலின். (7)

அ. பிறவாழி நீந்தற் கறவாழி தாள்சேர்

(இ-ள்.) பிற ஆழி நீந்தற்கு - ஏனைய பொருள் இன்பம் ஆகிய கடல்களைக் கடப்பதற்கு, அற ஆழி தாள் சேர் - தரும சாகரமாம் இறைவனது பாதங்களைச் சேர்வாயாக என்பதாம்.

(வி-ரை.) பிறவு ஆழி = பிறவாழி என்பது கொண்டு பிறப்பு எனப்பொருள் கூறி, பிறவாழி - பிறப்பாம் கடல் எனினும் அமையும். 'பிறவாழி கடக்கு மரக்கல மீந்தானால்' என்றார் பிறரும். பிறவு என்பது இரவு என்பது போன்று பிற என்னும் அடியாகப் பிறந்த தொழிற் பெயர்.

"ஆழ்கடற் புணைபி னன்ன
அறிவரன் சரணடைந்தான்"

— சிந்தாமணி : [380 செ.]

என்ற செய்யுட்கு 'பிறவிக் கடலை நீந்துதற்குத் தெப்பமன்ன அறிவனைச் சரணாக அடைந்தான் என உரை கூறுவர் ஆசிரியர் நச்சினார்க்கினியர். 'இதனால் கடவுளைச் சேராதார் பிறவியாம் சமுத்திரத்தைக் கடத்தல் அரிது எனப்பட்ட தென்க. 'போய்வரு குரை கடலுக்கொரு சம்பே' (திருப்புகழ்) என்பதும் இதனை வலியுறுத்தும். (8)

க. தலைவனை வணங்காத் தலை தலையலவே

(இ-ள்) தலைவனை - (எல்லாவற்றிற்கும்) முதல்வனும் கடவுளை, வணங்கா - இறைஞ்.

சாத, தலை - தலையானது, தலை அல - தலை ஆகாது என்பதாம்.

(வி - ரை) தலைக்குரிய கடமை இறைவனை இறைஞ்சுதல் ஆகலின் அக்கடமை செய்யாதது அப்பெயர்க் கேற்றதன்றாம். தலையலவே - சிறப்புள்ளது ஆகாதே எனினும் அமையும். ஏ - தேற்றேகாரம். (9)

**ம. இறைவனைச் சேரார் பிறவியுட் சோர்வார்**

(இ - ள்) இறைவனை - கடவுளை, சேரார் - சேராதவர்கள், பிறவியுள் - பிறப்பினுள் (அகப்பட்டு), சோர்வார் - இளைத்திடுவார்கள் என்பதாம்.

(வி - ரை) சோர்வார் என்பதனால், பன்முறையும் பிறவியெடுத்து அலைப்புண்டு இளைப்புறுவார் என்பது உணரப் பெறும். பன்முறையும் பிறவியெடுத்த வதனாற் சோர்வு ஏற்பட்டதென்க. "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்" என்பதும் ஓர்க.

—திருவாசகம். (10)

[இனி அக்கடவுளது ஆணையால் உலகமும்

களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக் கூறுகின்றார்.]

## அதி-உ : வான்

கக. வானே யுலகிற் றானே ரமுதம்

(இ-ள்) வானே - மழையே, உலகில் - உலகத்திலே, தான் நேர் - தன்னைத் தானே ஒப்பு ஆகிய, அமுதம் - அமுதமாகும் என்றவாறு.

(வி-ரை) வானுலகில் அமுதம் இருப்பதென நூல்கள் கூறும். ஆயினும் கண்கண்ட அமுதமாய் உலகில் வருவது மழையே. அமுதம் வானவர் பொருள். உலகத்தவர்க்கு அமுதம் மழை. வேறொன்றை உலகவமுதம் எனக் கூறொண்ணாதோ எனின், அம்மழையை நிகர்வதாய வேறொன்று இல்லாமையால் தன்னை யொத்தது தானே யென்பது பெறப்படும். ஆகலின் வேறு அமுதம் இல்லை யென்க. (1)

கஉ. உணுத்தந் துணவா வுறுவதும் வானே

(இ-ள்) உணுத் தந்து - உணவை உண்டாக்கி, உணவா வுறுவதும் - உணவாக இருப்

பதும், மழையே - மழையேயாம் என்பது.



(வி - ரை) உணவுப் பொருள்களைப் பெய்தலினாலே உண்டாக்கியும், நீராகப் பயன்படுவதனாலே உணவாகவும் ஆம். இவ்விரண்டு தகைமையும் வானிற்கே அமைந்தது என்பதும் தோன்றுமாறு அறிக. (2)

௩. வான்பொய்க் கும்மேல் யாநிற் கும்மே

(இ - ள்) வான் - மழையானது, பொய்க்கும் ஏல் - பொய்த்துப் போகுமானால், யா - (உலகில்) எவை, நிற்கும் - நிலைகொள்ளும்? (ஒன்றும் இராதென்பதாம்.)

(வி - ரை) "உணவெனப் படுவது நிலத்தொடு நீரே" [புற - 18] "அன்னமயம் பிராணமயம்" - "உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே" என்பவாகலான் உயிர் வாழ்வனவற்றிற்கு நீரின்றி உணவு அமையாது. ஆதலின் நீரினது அவசியம் தேற்றம். "எல்லா வுயிர்க்கும் ஏமமாகிய நீர்" [புற - 1] என்பதும் இதனை வலியுறுத்தும். (3)

கச. மழையின் றாயி னுழுவா ருழல்வார்

(இ-ள்) மழை இன்று ஆயின் - மாரி பெய்தல் இல்லை ஆனால், உழுவார் - உழவுத்



தொழில் செய்பவர்கள், உழல்வார் - அலைந்து வருந்துவர் என்பதாம்.

(வி-ரை) மழையிருப்பின் உழுபவர் தம் வேலைகளைக் கவனிப்பர். அஃதின்றேல் வேறொன்றையும் அறியாதவர்களாகி மனஞ் சுழல்வார் என்க. "மாரி யல்லது காரிய மில்லை" என்பதும் இதற்குச் சான்று பகரும். (4)

கரு. காப்பது மழிப்பதுங் கனமழை செயலே

(இ-ள்) காப்பதும் - (உலகத்தைக் காத்து வருவதும், அழிப்பதும் - (பெய்யாது) கெடுப்பதும், கனமழை - பெருமை பொருந்திய மழையினது, செயலே - காரியங்களாகும்.

(வி-ரை) காப்பது கனமழை என்னுங்கால் கனமழை என்பதற்குப் பெருமை தங்கிய மழையெனவும், அழிப்பது கனமழை என்னுங்கால் அதற்குப் பெருமழை எனவுங்

கொண்டு, பெருமைதங்கிய மழை உலகத்தைக் காக்கும், பெருமழை (அதிவிருஷ்டி) உலகை அழிக்கும் எனவும் கொள்ளுதல் பொருந்தும். (5)



௧௬. விசும்பின் றுளியாற் பசும்புற் றளிரும்

(இ-ள்) விசும்பின் - வானத்திலிருந்தும் விழுகின்ற, துளியால் - மழைத்துளிகளினாலே தான், பசும் புல் - பசுமையாகிய புல்லினது தளிரும் - இளங் குருத்தும் (உண்டாம்) என்றவாறு.

(வி-ரை) பசிய புல்லும் மழையினாலேதான் துளிரும் எனின் மற்றவைக்கு மழை இன்றி யமையாதது என்பது சொல்லாமலே விளங்கும்.

உம்மை - சிறப்பும்மை. இதனால் ஓரறிவுயிர்ப் பொருட்கும் மழையின் அவசியம் கூறப்பட்டது. (6)

கஎ. நெடுமழை யின்றேற் கடல்சுவ றுவதே

(இ-ள்) நெடுமை மழை - நீண்டு பெய்கின்ற (பருவங்கடவாது பொழியும்) மழையானது, இன்று எல் - பெய்தல் இல்லை எனில், கடல் - சமுத்திரமும், சுவறுவதே - வற்றிப் போக வேண்டியதே (அன்றி வேறில்லை) என்பது.



(வி-ரை) மழைக்கெனவே கடல் வேண்டும். கடலாற் பயன் மழையே. மழையில்லையாயின் கடலாற் பயனுமில்லை. கடல்நீர் வெப்பத்தால் ஆவியாக மாறிப் பின்னர் மழையாய்ப் பொழிந்து, ஆற்றின் வழி கடலிற் பாயும். மழையில்லையெனிற் சூரியன் நீரை ஆவியாக மாற்றல் ஒன்றே நடக்கும். பெருங்காலம் வருவாயின்றிச் சென்ற பின்னும் கடலேனும் சுவறு தொழியுமோ? "நின்று தின்றாற் குன்றுங் குன்றும்" அன்றோ? (7)

கஅ. வானவர் பூசனை வானமுண் டேற்றுன்

(இ-ள்) வானவர் பூசனை - கடவுளர்க்கு உரிய வழிபாடுகள், வானம் உண்டேல் தான் - மழை (பெய்து) இருத்தலினாலே யாம் என்றவாறு.

(வி-ரை) மழையில்லையாயின் அவையும் இலவாம் என்பது தேற்றம். (8)

கக. **தருமமுந் தவமும் வருமழை யானே**

(இ-ள்) மழையானே - மழையினாலே தான், தருமமும் தவமும் - ஈகையும் நன்முயற்சியும், வரும் - உண்டாவன என்பது.



(வி-ரை) ஈகைக்குப் பொருளும் தவமாகிய நன்முயற்சிக்கு உடல் வலிமையும் வேண்டும் ஆதலின் பொருளும் உணவும் பயக்கும் மழை இன்றியமையாததென்க. "வானஞ் சுருங்கிற் றானஞ் சுருங்கும்" என்பர் ஔவையார். (9)

உ௰. **மழையா லுலக மொழுக்கமு மதனே**

(இ - ள்) மழையால் உலகம் - மழையினாலே உலகம் (வளமும் நிலையும் பெற்று) உளதா கும்; (அன்றியும்), ஒழுக்கமும் அதினை - நல்லொழுக்கமும் அம்மழை பெய்வதனாலேயே உண்டாகும் என்றவாறு.

(வி - ரை) உணவில்லை யெனில் உயிர்தரிப் பான் உணவு வேண்டிக் கொலை களவு ஆதிய நிகழும். ஆகலின் உணவு விளைக்கும் மழை ஒழுக்கத்திற்கு ஆதாரமாவது ஓர்க. பஞ்ச காலத்தில் ஒழுக்கந் தவறுவோர் பலராவர்; இது கண்கூடு.

> "நீணில மாரியின்றி விளைவஃகிப் பசியுநீடிப்
> பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண்
> மாறி - ஆணையில் வுலகு கேடாம்"



என்னும் சிந்தாமணி (255) யையும்; சீகாளத் திப் புராணத்திற் பஞ்சநிலையையும் (நக்கீரர் சருக்கம்) கண்டுணர்க. (10)

[வானம் வழங்கிய வழிச் சிறப் புறுவன வாகிய அறம்முதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவோர் முற்றத்துறந்த

முனிவர் ஆகலின் அவரது சிறப்பை மேற் கூறுகின்றார்.]

## அதி-௩: நீத்தார்

**௨௧. நூலெலாந் தலைமையி னுவலுவ துறவே**

(இ - ள்) நூல் எலாம் - எல்லா நூற்களும், தலைமையில் - முதன்மையாக, துறவே - துறவினையே, நுவலுவ - (சிறப்பித்துச்) சொல்லுவன வாகும்.

(வி - ரை) வேதம் ஆதிய நூற்கள் பல்வேறு பொருள் குறித்துப் பேசினும் அறம், பொருள், இன்பம், வீடு ஆதியவற்றுள் முதன் மையதாக வீட்டு நெறியையே கூறும். எனெனில் முடிவிலின்பத்து மூவா முதல்வனை அடையும்நெறி தாளுகலின். அவ்வீட்டு நெறி "பரனை நினைந்து இம்மூன்றும் விட்டதே



பேரின்ப வீடு" என்றாங்கு, உள்ளத் துறவின் பாற் பட்டதே யாம். ஆதலின் எல்லா நூற் களும் தலைமையதாக வீட்டு நெறியாம் துற வினைக் கூறும் என்க.

னூற்கள் பலபொருள் நுவன்றிடும். சிறப்பினதாகத் துறவையே இயம்பலால் 'தலைமையில் நுவலுவ' என்னப்பட்டது. (1)

உ௨. துறந்தார் பெருமை யிறந்தாரி லதிகம்

(இ-ள்.) துறந்தார் - அகத்துறவு பூண்டவர்களது, பெருமை - சிறப்பு, இறந்தாரில் - இறந்தவர்களைவிட, அதிகம் - (அளவில்) மிகுதியாம் என்பது.

(வி-ரை.) உலகம் அநாதி. உலகம் உள்ளளவும் ஜீவர்கள் பிறத்தலும் இறத்தலும் கண்கூடு. 'பிறந்தோர் இறத்தல் திண்ணம். எனவே, அநாதிகாலந்தொட்டு யாவரும் இறந்தனராக அவர்களை அளவிடுவதெனில் ஒல்லாது. அஃதே அற்றாயின், துறந்தார் பெருமை அவ்வளவிற்கும் மேற்பட்டது. எனின் அவர்தம் பெருமை எவ்வித அளவுமில்லாமல் மேம்பட்டது என்பதே தேர்ந்த பொருளாம். (2)



உ௩. இருமைக் கயரும் பெருமையர் துறவோர்

(இ-ள்.) துறவோர் - நீத்தவர்கள், இருமைக்கு - இம்மை மறுமை ஆகிய இரண்டிற்கும், அயர்வர் - தளர்வார்கள் என்றவாறு.

(வி-ரை.) துறவினர் இகவாழ்வையும் பரவாழ்வாம் சுவர்க்க வாழ்வையும் விரும்பார் என்பது கருத்து.

இம்மையில் மானிட உடலம் தாங்கினர் உறுவது பிழைகளே யாகலான், இவ்வுடல் வாழ்விற் றளர்ந்தே துறவு மேற்கொள்ளல் இயல்பு. இதனை "ஆதலாற் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே" - என்னும் திருமாலைப் பாசுரமும்; "தரிக்கிலேன் காயவாழ்க்கை சங்கரா போற்றி" "உடலிது களைந்திட் டொல்லை யும்பர்தந் தருளு போற்றி" - என்ற மணிவாசகமும்; "படமுடியா தினித் துயரம் படமுடியாதரசே, பட்டதெல்லாம் போது மிந்தப் பயந்தீர்த் திப் பொழுதென் - னுடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டு" - என்னுந் திருவருட்பாவும் வலியுறுத்துவன காண்க.

இனி, மறுவுலக வாழ்வாம் சுவர்க்க மாதி யனவும் துறவினர் வேண்டார். எனெனில் சுவர்க்க வாழ்வும் அனுபவித்த் பின்னர் பிற விக் கேதுவாகலின் என்க.

"போகம் வேண்டி வேண்டிலேன் புரந்த ராதி யின்பமும்" — திருவாசகம்.

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வும்" — திருவாசகம்.

"ஆனரும் செல்வத்தரம்பையர்கள் தற்சூழ வானரும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்" — குலசேகரப் பெருமாள்.

"இந்திர லோகமாளும் - அச்சுவை தரினும் வேண்டேன் அரங்கமா நகருளானே" — திருமாலை.

எனவரூஉம் பொன் மொழிகள் இதற்குச் சான்றுவன. (3)

உச. பொறிபுலன் செலுத்தா வறிவன்மே லித்தான்

(இ-ள்.) பொறி - ஐம்பொறிகளின் வழியே, புலன் - உணர்வை, செலுத்தா - செலுத்தாத, அறிவன் - அறிவை யுடையான், மேல் நிலத்தான் - உயர் நிலமாம் பேரின்ப விடுடையவன் ஆவான் - என்றவாறு.



(வி-ரை.) மேல் நிலம் - மோக்ஷபூமி. "எந்நிலங்களினு மிக்க எழுநிலம் அவற்றின் மேலாம் நன்னிலம்" — என்பதும் இது. (4)

உ௫. ஐந்தவித் தவருக்கிந்திரன் சிறுவன்

(இ-ள்.) ஐந்து - ஐம்புல ஆசைகளையும், அவித்தவருக்கு - அடக்கினவர்களுக்கு, இந்திரன் —, சிறுவன் - கீழானவன் ஆவான் என்பதாம்.

(வி-ரை.) ஐம்புல ஆசைகளும் மண்டிக் கொழுந்துவிட்டெரியும் நெருப்புப் போன்றனவாகும். தீயானது யாவற்றையும் தன்பாற் கொண்டு தன்னுரு வாக்குதல்போல் ஐம்புலன்

களும் உலகில் உள்ள பொருள்கள்மேல் பாய்ந்து பற்றும். அவ் வேகத்தை நெருப்பை அவித்தல் (அணைத்தல்) போன்று அவித்தல் என்பது தோன்றவே அடக்கினவர் என்னாது 'அவித்தவர்' எனப்பட்டதாம்.

இந்திரன் தாழ்ந்தான் எனில், உபலக்கணத்தால் ஏனைய தேவர்களும் தாழ்ந்தவர்களாம் என்று பெறப்படுவதோர்க. எனவே தேவர்களுக்கெல்லாம் உயர்ந்தவர் புலவாசை நீத்



தோர் என்பது விளக்கம்.

இந்திரன் சிறுவனுமாறு:—

"தெய்வ மால்வரைத் திருமுனியருள
வெய்திய சாபத் திந்திர சிறுவன்"
"இந்திர சிறுவன் அயந்த னுகென
வந்தனைசெய்து வழிபடுதலைக் கோல்"

— சிலப்பதிகாரம் [அரங்கேற்று காதை]

"முத்தொளி விமானத் தெய்தி
மூவுல கத்தி னோடும்
இந்திரன் முடிமேல் தாள்வைத்
தேறுவர் சிவலோ கத்தே"

—திருவால. திருவிளை.

இவற்ருலுங் காண்க.

உசு. மனிதரிற் பெரியோர் மாட்சியிற் புரிவோர்

(இ-ள்.) மனிதரில் - மனிதர்களுக்குள், பெரியோர் - பெரியவர்கள், மாட்சியில் - (செயற்கரிய செய்யும்) பெருமையோடு, புரிவோர் - (செயல்கள்) செய்பவர்கள் ஆவர்கள் என்றவாறு.

(வி-ரை.) மாட்சியுறப் புரிபவரே மாட்சியுடையார் ஆகலான் அவர்களே பெரியார் என்க. மாட்சியுறப் புரிதலாவது பிறவாநெறி தேடலென்பர். (6)



உஎ. ஐம்பூத வுணர்வினன் றன்பால துலகு

(இ-ள்.) உலகு - உலகமானது, ஐம்பூத உணர்வினன் தன் - ஐந்து பூதங்களின் நிலையின் உணர்வையுடையவன், பாலது - இடத்துளது என்றபடி.

(வி-ரை.) உலகம் யாவும் ஐம்பூத வேற்றுமையே. பஞ்சீகரண சித்தாந்தத்தினல் உலகம் பூதத்தின் வேருயதில்லை என்பது துணியப்படும்.

கம்பரும் உலகத் தோற்றத்தை "பூதமைந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்'' (சுந்தர - க - ம் பாட்டு) என்றனர். எனவே ஐம்பூத உணர்வுடையா னிடத்தே உலக உணர்வும் காணப்படும் என்க. (7)

உஅ. முனிவரர் பெருமை மறைமொழி காட்டும்

(இ - ள்.) முனிவரர் - (மும்மலத்தை) முனிந்த பெரியவர்களது, பெருமை - சிறப்பை, மறைமொழி - வேதமந்திரங்கள், காட்டும் - வெளிப்படுத்தும் என்றவாறு.

(வி - ரை) பல பொருள்களையும் இரகசியங்களையும் மறைத்து வைத்திருத்தலின் வேதம் மறை யென்னப்பட்டது. முனிவரது



பெருமை ஏனையவர்களுக்குத் தெரிந்திருப்பினும், அது முழுமையல்லாமையாலும், அவர்கள் உள்ளளவு மட்டுந்தான் பெருமையைக் கூறுவர் ஆகையாலும், மறை நன்கு தெரிந்து கூறுதலோடன்றியும் அநாதிகால முதற்கொண்டு முறையிடலாலும், மறைகூறும்

பெருமை அவரது அழியாப்புகழினை என்றும் உணர்த்தும் என்க. (8)

### உக. குணமலை வெகுளி கணமுநில் லாது

(இ-ள்.) குணமலை - குணத்தில் மலைபோன்றவர்களுடைய, வெகுளி - கோபமானது, கணமும் - ஒருகண நேரங்கூட, நில்லாது - (பயனளிக்காமல்) நிற்காது என்பதாம்.

(வி-ரை.) குணத்தில் மலைபோறலாவது :

“அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே.’,

என்ற நன்னூலார் கூற்றின்படி மலைக்கு உறும் பண்புடையவரா யிருத்தலாம்.

‘ஆறுவது சினம்’ என்னும் தமிழ் மூதாட்டியுரைத்தவாறு பெரியோர் சினங்கொள்ளினும்



அஃதாறிவிடும் என்னும் பொருளில், இதற்குக் குணமலையன்னார் வெகுளி கணநேரமும் தங்கியிராது, உடனே ஒழிந்துபோம் என்னலாம்.

அன்றி, அவர்தம் சினம் கணமும் நில்லாமல் சினத்துக்குக் காரணமாவாரைத் தகையும் என்பதும் அமையும். "சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்" என்னும் கம்பர் மொழியிலே, எய்த இலக்குத் தப்பாது ஊடுருவ வேகத்துடன் செல்லும் இராமன் அம்பினைச் சினம்மேற்கொண்டு பெரியோர் தரும் சாபச் சொல்லினுக்கு உவமித்தது காண்க. (9)

௩௰. அந்தண ரென்போர் செந்தண்மை யாளர்

(இ-ள்.) அந்தணர் என்போர் - அந்தணர் என்று சொல்லப்படுபவர்கள், செந்தண்மை யாளர் - செவ்விய அருளையுடையோர், ஆவார் என்றவாறு.

(வி-ரை.) அந்தணர் அருளுடையார். அருளில்லார் அந்தண ரல்லராம். உயிர்களிடத்துக் குளிர்ச்சியாக்குவது அருளாகலான் தண்மை எனக் கூறுப. எதிர்ப்பயன் நோக்

காது இயற்கையில் எழுந்த தண்மையாகலின் அது செந்தண்மை யாயிற்றென்க. (10)

[இனி, அம்முனிவரா லுணர்த்தப்பட்டவற்றுள் முதன்மையும் வலிமையும் உடைத்தாகிய அறத்தினது சிறப்புக் கூறுகின்றார். "சிறப்புடை மரபிற் பொருளுமின்பமும் அறத்து வழிப்படூஉந் தோற்றம்போல" (புறம் - ௩௧) என்பதனுன் முதன்மையும்; இம்மை மறுமை வீடு ஆகிய மூன்றையும் பயத்தலால் வலிமையும் பெற்றது அறமென்க].

அதி. ௪ - அறம்

௩௧. கதிநிதி யறத்திற் பெரிதேதோ வுயிர்க்கு

(இ - ள்.) உயிர்க்கு - மன்பதைக்கு, கதி - முத்திநிலையும், நிதி - துறக்கச் செல்வமும் (தருவதாகிய). அறத்தில் - தருமத்திலும், பெரிது - பெருமை பொருந்தியது, எதோ - (வேறு) யாது (உளது)? இல்லை என்பதாம்.

(வி - ரை.) உயிர்களிற் சிறந்தன வாகலின் மன்பதைகள் என்னும் பொருளிற் கூறியதென்க.

பெரிய பொருள் செல்வமும் வாழ்வுமே. செல்வத்திற் பெரியது துறக்கச் செல்வம். வாழ்விற் பெரியது பேரின்ப நிலை. ஆதலின், பெரும்பயன் ஈயும் அறமும் பெரிதெனக. இவ்வுலகில் செய்யும் பல செயல்களும் பயனைக் கொண்டு மதிக்கப்படுவன. அவ்வழி பெரும் பயன் தரும் அறம் பெரிதென்பது ஓர்க. (1)

௩௨. அறந்தரு மாக்கம் பிறதரூஉ நீக்கம்

(இ - ள்.) அறம் - தருமம், ஆக்கம் - பெருக்கத்தை, தரும் - உண்டாக்கும். பிற - (அறம் அல்லாத) ஏனையவைகள், நீக்கம் - கேட்டை—தரூஉம் - அளிக்கும் என்பது.

(வி - ரை.) அறம் அல்லாதன மறமாம். எனவே அறம் ஆக்கத்தையும், மறம் கெடுதியையும் விளைவிக்கும் என்பதாம். "நன்மை செய்தார் நலம் பெறுவர் தீமைசெய்தார் தீமையுற்று நலிவர் தாமே" என்னும் தண்டலையார் சதகவடியும் இங்குக் கருதத் தக்கது. (2)

௩௩. ஏன்றள வறஞ்செயல் சான்றவர் கடமை

(இ-ள்.) என்ற அளவு - கூடிய அளவு, அறம்செயல் - கொடுத்தல், சான்றவர் - அறிஞர்கள், கடமை - கடன் ஆகும் என்றபடி.



(வி-ரை.) கொடுத்தல் சான்றவர் கடமை எனின், இல்லாராய சான்றவர் என் செய்வர்? என்னுங் கடா எழுங்கால், என்றள விதல் என விடையிறுக்க. 'இயல்வது கரவேல்' என்றனர் தமிழ் மூதாட்டியும்.

இயன்ற என்பது 'என்ற' என முதல் விகாரப்பட்டது. இதனை "எழனுருபிற்கு" (தொல்-எழு. உக) என்னும் சூத்திரத்தில் "ஆவயின்" என்ற இலேசாற் கொள்ளுப. (3)

௧௪. மனமா சின்மை யறம்பிற மாலே

(இ - ள்.) மனமாசு இன்மை - நெஞ்சத்துள் குற்றம் இல்லாதிருப்பதே, அறம்-தருமம், பிற-மற்றவை, மால்-துன்பந் தருவனவாம் என்றவாறு.

(வி-ரை). களங்கமற்ற மனத்துடன் புரியும் செயல்களே அறச் செயல் ஆகும்.

'ஈதலறம்' என்றாங்கு அறவாழ்க்கை ஈதலைப் பொறுத்தது. அவ்வீகை மாசுறின் அறமும் மாசுபட்டு அழியும் என்க. மனம்மாசு எவை



என்பார்க்கு விடையாக அடுத்த நூற்பா, நவில்கின்றது. ஏகாரங்கள் பிரிநிலையும் தேற்றமும் காட்டுவன. (4)

௧௫. அழுக்கா றுதிய விழுக்கல தறமே

(இ - ள்.) அழுக்காறு-பொறாமை, ஆதிய-முதலிய, இழுக்கு - குற்றங்கள், அலது - இல்லாதது, அறம் - தருமம் (ஆம்) என்றவாறு. ஏ - அசைநிலை.

(வி - ரை.) அழுக்காறு முதலிய இழுக்குகள் யாவெனில், அறத்திலும் முரண்படும்

பொறுமை, பேராசை, கடுஞ் சொல, கோபம் முதலியனவாம்.

இனி ஏகாரத்தைத் தேற்றப் பொருளிற் கொண்டு, ஒரு செயலை அறமா? மறமா? என ஆராய்வுழி அச் செயல் அழுக்காறு ஆதிய குற்றங்கள் அற்றதாயின் அதுவேதான் தருமம் எனப்படுவதாம் என்னலும் அமையும் என்க. (5)

௩௧. நாளையென் றுவறம் வேளையி லுதவும்

(இ - ள்.) நாளைக்குச் (செய்துகொள்வோம்), என்று-என்று நினையாது, (செய்கின்ற), அறம்



தருமமானது, வேளையில் - நமது (உதவி வேண்டும்) காலத்தில், உதவும் - உதவி செய்யும்.

(வி - ரை.) நாளைக்கியற்றலாம் என்று நினைக்கின் சோம்பல் உறும். நம் உடல் நிலையற்றதாதலின், நாம் நாளை இருப்பது நிச்சயமில்லையாக, நாம் செய்யலாம் என நினைத்ததை ஆற்றுவதற்கும் நிச்சயம் கூற ஒல்லாது. எனவே நாளை என்னாது எண்ணின ஞான்றே செய்க என்பதை இது கூறிற்று என்க. இதற்கு உதாரணம்:—

"நெருந லென்பது சென்றது நின்ற
வின்றுஞ் செல்லா நின்றது முன்சென்று
வருநாள் கண்டா ரியாரே யதனு
லொருநா ளகப்படுத் துடையோ ரின்மையின்
நல்லது நாடுமி னுள்ளது கொடுமின்
வழாஅ வின்பமும் புணர்மி னதாஅன்று
கீழது நீரகம் புகினும் மேலது
விசும்பின் பிடர்த்தலை யேறினும் புடையது
நேமி மால்வரைக் கப்புறம் போகினும்
கோள்வாய்த்துக் கொட்கும் கூற்றத்து
மீளிக் கொடுகோ விலக்குதற் கரிதே"

பாயிரம் 31

—என்னும் ஆசிரிய மாலையும்,

" நன்றே செய்யவும் வேண்டும் நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும் இன்றும்
இன்னே செய்யவும் வேண்டும் இன்னும்
நாளை நாளை யென்பீ ராகில்
நாளை நம்முடை முறைநா ளாவது மறியீர்
நமனுடை முறைநா ளாவது மறியீர் "

—என வரூஉங் கபிலரகவலும்

கண்டு கருதத் தக்கன.

" புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்றன் கேளறச்
சென்றான் எனப்படுத லால் "

—என்பது நாலடியார்

" இன் றருணே நயங் கண்டோம், உயர் ககன
முகட்டின்மிசை யிந்தப்பாறு
சென் றடைய காம்தாண்ப தையம்......"

—என்றார் நீதி நூலார்.

இனி, இதற்குப் பிறிதொரு பொருளுங் கூற லாம். நாளை - நாளைக்கு (வா தருகிறேன்), என்று - என்று கூறி (இரப்போரைப் போக்

காது), அறம் - (செய்யும்) தருமம், வேளையில்- நமது (அல்லற்படும்) காலத்தில், உதவும் - பயன்படும் என்பதாம்.

"குறிப்பறிந் தீதலே கொடை மற்றின்றென
மறுத்தலே கேட்டபின் வழங்கல்"

என நைடதமுடையார் மொழிதலானும்,

"இன்று என்பதும் நாளை யென்பதும்
இல்லை என்பதற் கடையாளம்"

என்பதொரு பழமொழி யுண்டாகலானும் இரவலரை வெருட்டாது செய்வதே தருமமாம் என்பது இதனிற் பொலிதல் காண்க.

அறச் செயல் முடிவில் நமது உடல் நீங்கும் வேளையில் நம்மொடும் வந்து துணைபுரியும் ஆகலின் அறம் வேளையி லுதவும் எனப்பட்டது. "பற்றித் தொடரு மிருவினை புண்ணிய பாவமுமே" என்பர் பட்டினத்தடிகள். (6)

௧எ. எடுப்பவ ரூர்பவர்க் கிடையதே தருமம்

(இ - ள்.) எடுப்பவர் - (சிவிகை யாதியவைகளைச்) சுமப்பவர்களுக்கும், ஊர்பவர்க்கு - (அவைகளின்மேல் ஏறிச்) செல்பவர்கட்கும்,

இடையதே - இடையிற் காணப்படும் தன்மையே, தருமம் - அறத்தின் பயனும்.

(வி-ரை.) அறம் செய்யார் இப் பிறவியில் சுமந்துவருவதும், அஃதாற்றினர் ஊர்ந்து சுகப்படுவதும் காணப்படுதலால், அவர்களிடையே அறத்தின் பயன் இன்பமும், அறஞ் செய்யாததன் பயன் துன்பமும் ஆம் என்பது உணரப்படும் என்க. (7)

க-அ. அறப்பயி னாற்றிற் பிறப்பறுக் கும்மே

(இ - ள்.) அறப் பயன் - அறமாகிய (வாழ்வின்) பிரயோசனத்தை, ஆற்றில் - செய்தால் (அச் செய்கை), பிறப்பு அறுக்கும் - பிறவியை ஒழித்துவிடும். ஏ - அசை.

(வி - ரை.) வாழ்வின் பயன் அறம். அதைச் செய்தால் அஃதால் ஆம் பயன் பெறலாம். அப் பயனே பிறப்பறுத்தல் என்க. (8)

க-க. அறப்பொரு ளின்பம் புறப்பயன் றுன்பம்

(இ - ள்.) அறம் - அறத்தினது, பொருள் - செல்வம், இன்பம் - பேரின்பமாம். புறம் - அதற்கு வேறுபட்ட (அறம் அல்லாத) னவின்,

பயன் - பிரயோசனம், துன்பம் - துன்பம் ஆகும்.

(வி-ரை.) அறத்தால் வரும் செல்வம் இன்பம். எனவே இன்பம் அறத்தின்பாற்பட்டதே. புறம்எனில் வெளி. அறத்தினும் புறத்தது எனில் தருமத்திலும் வேறுபட்டது என்பது பொருளாம். எனவே அஃது அதருமம் அல்லது மறம் எனப்படுவதாம். (9)

**௧௦. அறிவுளார் விருப்ப மறன்பிறி தவமே**

(இ - ள்.) அறிவுளார் - அறிவுடையவர்கள், விருப்பம் - விரும்புவது, அறன் - தருமம், பிறிது (அவர் விருப்பம் அல்லாத) வேறு பொருள்கள், அவமே - வீணவையே ஆம்.

(வி - ரை.) ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. ஏகாரத்தைக் கடைநிலைத் தீவகமாக வைத்துக்கொண்டு, அறிவுளார் விருப்பம் அறனே பிறிது அவமே எனப் பிரித்துப் பொருள் கோடல் சிறப்பிற்றென்க.

அறிவுள்ளார் விரும்புவது அரிய பொருளாகவே இருக்கவேண்டும். அறிவுளார் இது

நன்று, இது தீது என்று அறியும் அறிவு கொண் டிருத்தலால், அறிந்து நன்றையே விரும்புவர். ஆகலின் அவர்கள் விரும்புவது நன்மைதரும் தருமமே. ஏனையோர் நன்றிது, தீதிது என உன்னமாட்டாராக, அவர்கள் விருப்பம் பலவாயினும் அவை நன்மை ஈயா. எனவே அவ்விருப்பம் பயன்படாது வீணாகும் என்பது காட்டப் பிறிது அவமே என்னப் பட்டது.

அன்றியும், அறிவுளார் விருப்பமாகிய அறனை நாம் கடைப்பிடித்தல் வேண்டும். அவ் வறன் அல்லாத வேறு வகைப்பொருள்களைக் கைக்கொண்டால், அம்முயற்சி வீணேயாம் என்பதும் இதனாற் பெறப்படும். (10)

[அறஞ்செய்தற்குரிய இருவகை நிலையுள் முத லாவது இல்லறமாதலின், இல்லாளோடு கூடி வாழும் அதன் சிறப்பு மேலே கூறப்படுகின்றது. மற்றது துறவறம். அது பின்னர்க் கூறப்படும்].

பாயிரம் முற்றிற்று.

---

## இல்லறம்

### அதி - ரு : இல்லம்

சக. ஏனை மூவர்க்கு மில்லறத் தான்றுணை

(இ - ள்.) இல் அறத்தான் - இல்லற வாழ்க்கை நடத்துபவன், ஏனை - (தன்னை யொழிந்த) மற்ற, மூவர்க்கும்—மூன்று ஆஸ்ரமம் உடையவர்களுக்கும், துணை - உதவி ஆவான் என்பதாம்.

(வி - ரை.) ஏனை மூவராவார் பிரம்மசாரி, வானப்பிரஸ்தன், சன்யாசி இவர்கள். இம் மூவர்களும் பொருள் ஈட்டி உணவுகொள்ளும் முறையிலும் வேறுபட்ட கடமைகளைக் கொண்டிருத்தலால், அவர்களை உண்டியுதவிக்காத்தல், அவ்வுண்டிக்கு முதலாகிய வேளாண்மை, பொருளீட்டுதல் ஆகிய கடமைகளைக் கொண்டுள்ள இல்லறத்தான் செய்ய வேண்டியதாயிற்று. இதனால் இல்லறத்தான் அவர்கட்குத் துணையாகின்றான் என்க. (1)

சஉ. துறந்தவர் வறியா ரிறந்தார்க்கு மவனே

(இ - ள்.) துறந்தவர் - (முற்கூறிய ஆஸ்ரம-

முறைக்கு வேறுபட்டவர்கட் குள்ளே) நீத்த வர், வறியார் - ஏழைகள், இறந்தார் - செத்த வர்கள் (ஆகிய தென்புலத்தார்) இவர்கட்கும், அவனே - அவ்வில்லறத்தான்றான் துணையா வான் என்க.

(வி - ரை.) துறந்தவர் எத்தொழிலும் இல் லாராக, அவர்க்கு வேண்டுவன செய்தலான் அவர்க்கும், ஏழையர் வறுமையினால் அல்லற் படுவாராகலின், அவர்கட்கு உணவுமுதலிய

கொடுத்தலான் அவர் தமக்கும், இறந்தார் நன் னெறிச் செல்ல அவர் பேரால் நீர்க் கடனாற்ற லால் பிதுர் தெய்வங்கட்கும் இல்லறத்தான் உதவக் கடவன். ஏகாரம் - பிரிநிலைப் பொரு ளில் வந்தது. (2)

௪௩. பிதிர்நிறை புதியோ ரினத்தனேும் பல்தலை

(இ - ள்.) பிதிர்-பிதிர்தெய்வங்கள், இறை-தெய்வம், புதியோர் - விருந்தினர், இனம் - (தனது) சுற்றத்தார், தன் - தான் (ஆகியவர்களை), ஓம்பல் - காப்பாற்றுதல், தலை - (மேற்கூறிய இல்லறத்தானுக்கு) முதன்மையாம் கடமை என்றவாறு.



(வி - ரை.) தலை - தலைமையானது. தலை என்பதனால் இவ்வைந்தும் முதன்மையாம். அஃதன்றி விலங்குமுதலியவைகட்கு உதவுதன் முதலியவைகளும் கோடற்பாலன என்பது தெளிவாதலறிக. பிதிர் - பிதிரென்று நிற்று, இது கடைக்குறை. (3)

சச. பழியஞ்சும் பாத்தூண் வழியெஞ்ச லில்லை

(இ - ள்.) பழி - பாவத்திற்கு, அஞ்சும் - பயப்படும், பாத்தூண் - (பொருளைக்கொண்டு) பகுத்து உண்ணப்படும் உணவிற்கு, வழி எஞ்சல் - சந்ததி குறைபடுதல், இல்லை - இல்லையாகும்.

(வி - ரை.) பழியஞ்சும் பாத்தூண் என்பது பழியஞ்சி ஈட்டும் பணத்தினைக்கொண்டு சுற்றத்தார், விருந்தினர், ஏனையோரோடு பகுத்துண்ணப்படும் உணவு எனப்பொருள்படும். எனவே பழியஞ்சாது பொருள்பெற்று அவ்வழி உறும் பாத்தூண் மாறுபட்டது என்பது காண்க. அச்செயல் "மாட்டையடித்துச் செருப்புத்தானம் செய்வதை" யொக்கும்.



இங்கு, உணவு என்பது உணவினையுடையாருக்கு ஆயிற்று. எனவே ஆகு பெயர். இல்வாழ்வில் குற்ற மற்ற பொருள்கொண்டு ஏனையோர்களுடன் பகிர்ந்து உண்பவாது சந்ததி எக்காலும் குறைவுபடாது, மேன்மேலோங்கும் என்பது தேர்ந்தபொருள். (4)

சடு. அன்பற னுளதேற் பண்புடைத் தில்லம்

(இ - ள்.) இல்லம் - இல்லறவாழ்வு, அன்பு - அன்பையும், அறன் - தருமத்தையும், உள தேல் - கொண்டிருந்தால் (அவ்வில்லம்,) பண்பு - உரிய இலக்கணங்களை, உடைத்து - உடையதாம்.

(வி - விரை.) இலக்கணங்கள் அன்பும் அற
முமாக அவையிலா இல்வாழ்க்கை இலக்கண
மற்றதே என்க. (5)

௪௬. அறவழி யில்லந் துறவினுட் பெரிது

(இ - ள்.) அறவழி - தரும நெறியில் (நடத் தும்), இல்லம் - இல் வாழ்க்கையானது, துறவினுள் - (பல்வேறுபட்ட) துறவு நிலைகளுக்குள்ளேயும், பெரிது - சிறப்புடையது.





(வி - ரை.) இல்லம் என்பது இல்லற வாழ்க்
கையை உணர்த்தி நின்றது. (6)

௪௭. தரும வில்லாளி யருந்தவ மீளி

(இ-ள்.) தருமம்-அற நெறியிற் பொருந்திய, இல்லாளி-இல் வாழ்க்கை உடையோன், அரும்-அருமையுள்ள, தவ மீளி-தவம் பொருந்திய ஏறு போன்றவன் ஆவான்.

(வி-ரை.) தவத்தில் மீளி எனவும் கூறலாம். மீளி என்பதற்கு அரசன் எனப் பொருள் கொண்டு தவராஜன் எனப் பொருள் கோடலும் அமையும். அவ் வழி அவ்வரசுக்

குரிய ஆட்சி இல் ஆட்சி என்பது தோன்ற 'இல்லாளி' என்றிருப்பது பொருந்தும் என்க.

ஏனைய இலலாளியினின்றும் பிரித்துக் காட்டத் தரும இல்லாளி என்றார். (7)

௪அ. நோற்பித்து நோற்கு நோன்மைய தில்லம்

(இ-ள்.) இல்லம்-இல் வாழ்க்கை, நோற்பித்து-பிறரைத் தவம் செய்யுமாறு (உதவி யல) செய்து, நோற்கும்-(தாமும்) நோன்மையது-பெருமையுடையதாம்.

(வி - ரை.) பிறர் தவம் செய்வது இல்லறத் தான் உணவு முதலியன கொடுத்து உதவ ; லால் ஆகலின், அவர்களைத் தவம் செய்யவிடுத் தல் இல் வாழ்க்கையிற்பட்ட கடமையே யாமென்க.
(8)

சுசு. பழியோரீஇ யறத்திற் பட்டதே வாழ்க்கை

(இ - ள்.) பழி - பிறர் கூறும் தூற்றலினின் றும், ஓரீஇ - நீங்கி, அறத்தில் - தரும நெறியின் பால், பட்டதே - உள்ளதே, வாழ்க்கை - இல் லற வாழ்க்கையாம்.

(வி - ரை.) ஏகாரம் பிரிநிலையை உணர்த்தும். அறத்திற்படாத ஏனையவை இல் வாழ்க்கை யன்று என்பதை இது குறிக்கின்றது.

இனி, இதனைப் பொதுப்பட நோக்கின், உயிர் வாழ்க்கை பழியின் நீங்கி, இல்லறம் அல் லது துறவறம் ஆகிய தரும நெறியின்பாற் பட்டதே யாம். ஏனையவை வாழ்க்கையாகா என்பதும் இதனாற் பெறப்படும். எனவே எந் நிலையினராயினும் பழியின் நீங்குதல் வேண்டுமென்றும், அற நெறியிற் செல்லல் வேண்டுமென்றும் இஃதுணர்த்தும். (9)

**௧௦. நன்னெறி வாழ்க்கையன் முன்னிடும் தெய்வம்**

(இ - ள்.) நல் நெறி - (முற் கூறியபடி) நல்ல வழியில், வாழ்க்கையன் - (நடாத்தும்) வாழ்க்கை யுடையவன், முன் இடும் - முதன்மை யாக வைக்கக்கூடிய, தெய்வம் - கடவுள் ஆவான் என்பதாம்.

(வி - ரை.) கடவுளைப் போன்றவன் என்க. கண்கூடாகக் காணப்படுதலானும், தோன்றும் துணை யாகலானும் முன்னிடும் தெய்வமாம். முன்னுதல் நினைத்தல். எனவே முன்னிடுந் தெய்வம் என்பதற்கு எவரும் நினைக்கும் என வும் பொருள் கூறுதல் ஆம். அனைவோர்க்கும் துணைவனா யிருப்பதால் யாவரும் நெஞ்சிற் கொள்வர் ஆகையால் அஃதாமாறறிக. (10)

[இனி, அல் லில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மை கூறுகின்றார்].

அதி. ௬ - மனைவி

**௧௧. குணநலஞ் செட்டிமை கொண்டவள் மனைவி**

(இ - ள்.) குணநலம் - நல்ல குணங்களாகிய நன்மைகளும், செட்டிமை - செட்டும், கொண்

டவள் - உடையவள், மனைவி - பெண்டாட்டி யாவாள் என்பதாம்.

(வி - ரை.) செட்டிமையாவது வருவாய்க்குத் தக்க செலவு செய்தல். குணநலம் இயற்கையிலே பிறக்கும்போழ்தே அமைவது. குணநலம் இப்பொழுதும் தோன்றல் கூடும். தனது கணவனைப்பெற்று இல் வாழ்வை நடத்த முற்படும் பெண்மணி வாழ்க்கை நடாத்துங்கால் அவளிடம் செட்டிமை தோன்றும் ஆகலின் குணநலத்தை முன்னரும், செட்டிமையைப் பின்னரும் வைத்துக் கூறினாரென்க. (1)

ருஉ. இழிகுண மனைவியே லழிவன மாண்பே

(இ - ள்.) இழி - கெட்ட, குண - குணத்தையுடைய, மனைவியேல் - மனைவியானால், மாண்பு - பெருமைகள், அழிவன - நீங்குவனவாகும் என்பதாம்.

(வி - ரை.) மனைவி இழி குணம் உடை

யவளா யிருப்பின் ஏனைய மாண்புகள் பல இல்லினிடத்தே யிருப்பின், அவை அழிந்து போய் விடுவனவாம். எனவே, உயர் குணப் பெண்ணே மனையாள் ஆவாள் என்பது கருத்து.



### ௪௩. மனைமாட்சி யுளதே லெனைமாட்சி யிலதே

(இ-ள்.) மனை - இல்லாளின், மாட்சி - பெருமை, உளதேல் - (ஒருவனது இல்வாழ்க்கையில்) இருக்கும் எனின், எனை மாட்சி - என்ன பெருமை, இலது - (அவனுக்கு) இல்லாததாகும்? என்றவாறு.

(வி-ரை.) மனை - இல்லாள், மாட்சி - பெருமை பொருந்திய நற்குணம், உளரேல் - உள்ளவளா யிருந்தால் எனவும் கூறலாகும். இவ்வாறு கொள்ளுங்கால் 'உளதேல்' என்பது திணைவழுவமைதி யாவதறிக. எல்லாமாட்சியும் உளவாகும் என்பது உணரப்படும். (3)

### ௪௪. கற்புறு மனைவியின் மற்றெது பேறே

(இ-ள்.) கற்பு உறு - கற்புடைய, மனைவியில் - மனையைவிட, மற்று - வேறு, எது - எப்பொருள், பேறு - பாக்கியம் ஆகும்? என்பதாம்.

(வி - ரை.) மனையில் - மனைவியைப்போல என்றலும் அமையும். பெறப்படுவது பேறு ஆகும். எனவே பெறப்படுபவைகளுட் சிறந்த



பேறு கற்புறு மனைவியை அடைதலே என்பது உணர்க. (4)

௫௬. நன்மனை மொழியா லின்மழை பொழியும்

(இ - ள்.) நல்மனை - (மேல் கூறப்பட்ட குண நலம், செட்டிமை, கற்பு ஆகியன கொண்ட) நல்ல மனைவியின், மொழியால் - வார்த்தை யால், இன்மழை - இனிய மழை, பொழியும் - பெய்யும் என்றபடி.

(வி-ரை.) கற்புடைய மகள் மழை பெய்யப் பணித்தாலும் அங்ஙனே பெய்யும் என்க. உயிர்கட்கெல்லாம் இனிமை விளைவிப்பதால் 'இன் (இனிய) மழை' என்றார். அன்றி, மழையினுள் சிறு பெயலும், எல்லைமிகு பெய லும் பயனின்று ஆகலின், உயிர்கட்கு வேண்

டிய அளவு குறைவும், மிகுதியும் இல்லாது பெய்யும் மழை, கற்புடைப் பெண்டிர் சொல்லால் பொழிவதாகும். எனவே 'இன்மழை' என்றார் எனலும் ஆம்.

அன்றியும், நெடுநாட் பஞ்சத்தில் பரிதவிக்கும் நாட்டில் பல நாட்களாக இல்லாத மழை பொழியும் என்பதும் பொருந்தும். இத



னானே, கற்புடைப் பெண்டிர்தம் மொழி தெய்வமொழியனைய வினையை யாற்றும் என்பது குறிக்கப் படுகின்றதோர்க. (5)

'வறனோடின் வையத்து வான்றருங் கற்பு'
'மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம் பெண்டிர்'

என்பன இங்குக் கருதத் தக்கன.

௬. தற்கண வன்சொற் றகைமயள் மனையள்

(இ-ள்.) தன் கணவன் - தனது புருஷனுடைய, சொல் - சொல்வழி, தகைமையள் - (கடவாது நடக்கும்) குணம் பொருந்தியவள், மனையள் - மனைவியாம்.

(வி - ரை.) சொற்றகையள் - சொல்லிய மொழிக்குத் தகுதியுடையவள் என்பதும் அமையும். கணவன் கூறும் மொழிக்குத் தகுதியாய், அவன் உத்தரவிற்குக் கீழ்ப் படிந்து நடக்கும் பண்புடையாள் என்பதே தேர்ந்த கருத்து. (6)

௭. பெண்டிர்தங் காவல் திண்டிற லரணே

(இ - ள்.) பெண்டிர்தம் - பெண்களது, காவல் - காப்பாவது, திண் - உறுதியான, திறல் - வலிமையுடைய, அரணே - காப்பாமோ.



(வி - ரை.) பெண்டிர் தம்மைப் பிறர் காத்தல் என்பது அரணாகுமோ? ஆகாது என்றபடி. ஆயின், பின்னை மற்றெதுதான் காவல்? என்ற

கடாவுக்கேற்ப, வேறு பொருள் நயமும் இவ்வடியிலே பொருந்துமாறு கூறுதும்.

பெண்டிர் - பெண்கள், தம் - தமது, காவல்-தற்காப்பு, திண்-உறுதியுடைய, திறல்-வலிமை பெறும், அரணே - காப்பாகும் என்றபடி. இங்கு 'தம் காவல்' என்றது தம்மைத்தாமே காக்கும் வன்மையைக்காட்டி நின்றது. முன்னைப் பொருளில் ஏகாரம் வினைப் பொருளது, இக்கூறு மதில் தேற்றப் பொருளது.

பெண்டிர் பிறரால் காக்கப்பட்டார். தமது நெஞ்ச வுறுதியின்மேற் கற்புக் காத்தார் எனின் அதுதான் வலிமைமிகுங் காப்பாகும் என்றவாறு. (7)

௮. கொழுநனைப் பேணிற் றொழுகுவர் வானோர்

(இ - ள்.) கொழுநனை - தனது கணவனை, பேணில் (ஒரு பெண்) வணங்கி ஓம்பினால், வானோர் - தேவர்கள், தொழுகுவர் - (அவளை) வணங்குவார் ஆவார்கள் என்பதாம்.

௯ குட்டிக்குறள்

(வி - ரை.) வானோரை மனிதர் வணங்குவர். அவ் வானோரே கற்புடையவளை வணங்குவர் எனில், அவள் தேவர்களை வணங்குதல் வேண்டாவென்பது சொல்லாதே அமையும். ()

௫௬. நல்லிலா ளிலையே லில்லையா னடையே

(இ - ள்.) நல்இல்லாள் - (ஒருவனுக்கு) நற்குணம்பொருந்திய மனைவி, இலையேல் - இல்லையானால், நடை - ஒழுக்கம், இல்லை - இல்லாததாகும் என்பதாம்.

(வி - ரை.) நல்லவ ளிருப்பின் இல்லொழுக்கம் திறம்பட நடக்கும். இல்லவள் முரண்படின், அவளொடு ஒன்றி ஒழுகும் ஒழுக்கமும் முரண்பட்டொழியும். எனவே ஒழுக்கம் தடைபடுமாறறிக.

'ஆன் நடை' என்பதற்கு "ஏறுபோற் பீடு நடை" என்றாங்கு, கம்பீரம்பொருந்திய நடை எனச் சிறப்புப்பொருள் கூறினும் அமையும்.

நடை - ஒழுக்கம் : " நடையினின்றுயர் நாயகன் " என்பர் கம்ப நாடரும். ஆல், ஏ. அசைகள்.

[illegible] மனைநலம் மனைவி யணிகலன் தனையர்

(இ-ள்.) மனை - வீட்டினது, நலம் - அழகு, மனையாட்டியாவாள். அணிகலன் - அவ் வீட்டிற்கு ஆபரணம், தனையர்-பிள்ளைகளாம் என்பது.

(வி-ரை.) மனை என்பதொன் றுண்டாயின் தலைவியும் வேண்டும். இல்லையெனில் அஃதில்லம் ஆகாது. ஆதலின் 'நலம்' என்றார். இதனை "மனைக்குப்பாழ் வாணுதலி இன்மை" "பாழே மடக்கொடி யில்லாமனை", என்ற ஆன்றோர் உரைகள் உணர்த்துமாறு அறிக.

உடம்பிற்கு அழகு உடம்புபெற்ற ஞான்றே இயல்பில் அமையும். பின்னர் செயற்கையினால் மக்கள் அழகினை அணிகலன் அணிந்து உண்டாக்குகிறார்கள். அங்ஙனமே, மனையழகு மனை வாழ்க்கை தொடங்குங்காலே யமைதல் வேண்டும். இல்லாளொடு வாழ்க்கை நடாத்துங்கால், இருவரது தவமுயற்சியின் பயனாக மனைக்குப்

புத அழகாகிய தனையர்கள் உண்டாதலால், உடம்பின்மேல் பின்னர் முயற்சிசெய்து அணியும் அணிகலன் ஒக்கும் என்க. உடம்பு பெற்றாலும் அழகுபெறுதல் அரிது. அவ்வாறே



இல்லிருப்பினும் நல்லிலாள் பெறுதல் அரிதாம். நல்லழகுற்றா னெனினும் செல்வம் பெற்றிலனாயின் அணிகலன் கொள்ள இயலாது. அஃதேபோல நன் மனைவியோடு வாழ்க்கை நடாத்தினும் கடவுளின் அருட்செல்வம் இருப்பின் மக்கள் உறுவர். இவ் வுவமை விரிக்கிற் பெருகும். (10)

[இனி, பிதிரர்க்குக் கடன் புத்திரரான் அல்லாது இறுக்க இயலாது ஆகலின், அவ்வில்லறத்தார்க்குறும் நன்மக்கட்பேறு குறிக்கின்றார்]

## அதி-எ: மக்கள்

சுக. அறிவுடை மகாரிற் சிறந்தபே றில்லை

(இ - ள்.) அறிவு உடை - நல்ல புத்தியை உடைய, மகாரில் - மக்களைவிட, பிறிது-வேறு, பேறு - உயர்ந்த செல்வம், இல்லை - கிடையாது என்பதாம்.

(வி - ரை.) ஏனையமக்கள் பெற்றாலும் அவர்களைப் பெறுதல் பெரும்பேறு ஆகாது, அறிவு உடைய மக்கள்தாம் உயர்பேறு ஆவார். முன்னர் 'கற்புறு மனைவியின் மற்றெது பேறே' (௫௪) என வினாவாக வந்தது. அதுவே



ஈண்டு மக்கள் அறிவுடையராயின் அதினும் பேறு இல்லை என்பது துணிவாகலின் 'பிறிது பேறு வேறில்லை' என உறுதி கூறினர். (1)

௯௨. நன்மகா ரெழுமையின் றுன்பறுப் பாரே

(இ-ள்.) நல்மகார் - நல்ல மக்கள் ஆவார், எழுமையின் துன்பு - (பெற்றோர்கள் உழலும்) எழுவிதப்பட்ட பிறப்பில் வரும் துன்பங்களை, அறுப்பார் - நீக்குவார்கள் என்றவாறு.

(வி - ரை.) தம் பெற்றோர்களை எண்ணிப்

பல ஆற்றுவதனால் பெற்றோர்களின் துன்பச் சுமையைப் புதல்வர்கள் குறைப்பார்கள் என்பது. எழுமை-எழுதலைமுறை என்றும் ஆம். ()

சுசு. அரும்பொருள் தனைய ரவர்பொருள் தமவே

(இ-ள்.) அரும்பொருள்-(மனிதர்கள்) பெறுதற்கு அரிதாகிய செல்வம், தனையர்-மக்கள் ஆம்; அவர் பொருள்-அம் மககள் ஈட்டும் செல்வம், தம் - தம்முடையன ஆகும் என்றவாறு. ஏ-தேற்றம்.

(வி-ரை.) அருமையாய்ப் பெறும்பொருள் என்றதனால் பொருட்செல்வம் எளிதினும் குட்டிகதறள

பெறலாம் என்பதும், அப்பொருள்போலாது வருந்திப் பெறும்பொருட்கு ஒப்பாவார் மக்கள் என்பதும் உணரப்படும்.

செல்வம் இல்லார் மக்களைப்பெற்றால் அது செல்வம் ஆகுமோ எனக் கடாவின், நன்று கேட்டாய்; அம் மக்கள் ஏனைச் செல்வங்களினும் மிக்க அரிய செல்வத்திற்கு ஒப்பாவதோடு அமையாது, அவர் பிற்காலத்து ஈட்டும் செல்வமும் தாம் அநுபவித்தற்கு ஆம் என்

பதூஉங் காண்க.

இனி, அரிய செல்வம் மக்களாம்; அம் மக்களுக்குத் தம்முடைமையாம் பொருள் உரிமையாம் என்றும் கூறல் பொருந்துவது, தந்தையீட்டும் பொருள் மைந்தர்க்கு ஆதலால். இதனாலே 'அவர்பொருள் தமவே' என்றார் என்பது.

தமக்கு மக்களிலும் உயரிய செல்வம் இல்லாததுபற்றி 'அரும்பொருள் தனையர்' என்றார். "படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணும் உடைப்பெருஞ் செல்வராயினும் ** மக்களை யில்லோர்க்குப் பயக்குறை யில்லைத் தாம் வாழுநாளே [புறம்-188] என்றார் பிறரும்.



தாம் ஈட்டிய செல்வம் செல்வமல்லவோ என்பார்க்கு அச் செல்வம் அம் மக்களுக்கே செல்வம் என்றார் என்பதறிக. (3)

கூச. இளமகா ரனாயகூ ழுழுதிஜு மினிது

(இ-ள்.) இளமகார்-இளமை பொருந்திய (தமது) மக்கள், அளாய-(தமது மென் கரங்களால்) துழாவிய, கூழ்-கூழானது, அமுதினும்-தேவருணவைக்காட்டிலும், இனிது-இனிமையுடையது ஆகும்.

(வி-ரை.) இளங் குழந்தைகள் தமது பூங்கை கொண்டு அளையப்பெறுவது கூழே ஆயினும் அஃது இனிக்கும் என்க. ஈண்டு இனிமையென்றது 'உடல்குளிர உயிர்தழைய உணர்ச்சியோங்க உளங்கனிய' இன்பந்தரும் தன்மையை.

முதிர்பிராயத்து மக்கள் தமக்குப் புதல்வர்களாயினும், இளங் குழந்தைகள் அளைந்தது தான் இனிமையுடையது என்னும் வேறுபாடு குறிப்பார் 'மகார்' என்னாது 'இளமகார்' என்றார். முதனூலிலும் "சிறுகை அளாவிய" [குற-64] என்று இளங் குழந்தைகளையே குறிப்பித்த தறிக.

ஈஞளாவுதலாவது "சிறுகை நீட்டி இட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்தும் நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தல்." (4)

சுரு. சிறடி யுடல்மொழி செவியுற வின்பம்

(இ-ள்.) சிறு அடி-(தமது மகவின்) சிறிய அடிகள், உடல்-உடலினும், மொழி-அக் குழந்தைகளின் குதலைச் சொற்கள், செவி-(பெற்றோரது) காதுகளிலும், உறல் - படுதல், இன்பம் - இனிமை பயப்பனவாம்.

(வி-ரை.) உறல் என்ற சொல்லைச் சிறடி யுடலுறல், மொழி செவியுறல் எனப் பிரித்து ஒட்டுக. முன்னடியில் 'இளமகார்' என்ற தொப்ப இந்த 'சிறடி' என்றது மக்களின் இளமை குறித்து நின்றது, முதுமகனடி ஒல்லாதாகலின். சிறுமொழி-குதலைத் தீஞ்சொல் என்பதும் கொள்க. (5)

சுசு. குழலும் யாழும் மழலைமுன் குழைவ

(இ-ள்.) குழலும்-புல்லாங்குழலும், யாழும்-வீணையும், மழலைமுன்-(இளங் குழந்தைகள் பேசும்) குதலைச் சொற்களின் முன்னிலையில், குழைவ-கலங்குவன ஆகும்.

(வி-ரை.) மழலை குழலையும் யாழையும் இனிமையில் வென்றுவிடும் என்பது பொருள். தம்மினும் வல்லான் ஒருவன் அவையினர்முன் தனது திறங்காட்டப் புகுந்தால் ஏனையோர் கலங்குவர். அஃதொப்பத் தமது இசையினும் கேட்போருக்கு இனிமைதரும் மழலை மொழியின்முன்பு குழலும் யாழும் தோல்வியுற்றுக் கலங்குவனவாம் என்க.

குழலிசையும் யாழிசையுமே ஒவ்வாவெனிற் குயிலிசை முதற் பிற குறித்துக் கூறல் மிகை.

"குழலும் யாழுமென் றினையன மழலைமுன் குழைய" என்பார் கம்பநாடரும். (6)

. சுஎ. தந்தைசெய் நன்றி முந்துறாஉம் வென்றி

(இ-ள்.) தந்தை-மகனைப் பெற்றவன், செய் நன்றி-(அம் மகனுக்குச்) செய்யவேண்டிய உதவி (யாதெனில்), முந்து உறாஉம்-(அவையிலும் உலகிலும்) முற்படுகின்ற, வென்றி-ஜெயம் ஆகும்.

(வி-ரை.) தந்தை என்றதால் மைந்தன் எனலே அவாய் நிலையாற் பெற்றும். தந்தை தன் மகனை முற்படுத்தல்தான் அவன் செய்யவேண்



டிய கடமையாகும். உலக வழக்கில் முன்னுக்கு வருதல், முன்னுக்குக் கொணர்தல் என வழங்குமாறு அறிக. அவை நடுவில் புலமைத் திறத்தால் முற்படுதலேயன்றி, ஒழுக்கத்தால் உலகில் முற்படுதலும் கூறப்படும். இதனைச் "சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே" [புற-312] என்பர் பொன் முடியார்,

"உயர்மிக்க தந்தை" என்ற திருத்தக்க தேவர் தொடர்க்குப் 'பிள்ளை உயர்ச்சி மிகுதற்குக் காரணமான தந்தை' என்று பொருள் கூறினர் நச்சினார்க்கினியரும். [சிவக: 472. ந.]

உலகில் முன்னுக்கு வருதல் எனின் அஃது அரியதொன்றும். பற்பல இடையூறுகளைத் தாண்டியே அங்ஙனம் வருதல் வேண்டும். அவ்விடையூறுகளை வென்று முற்படுதலால் அதனை 'வென்றி' என்றார். (7)

கஅ. மகார்தமிழ் சிறத்தல் மன்பதைக் கினிமை

(இ-ள்.) மகார்-தமது மக்கள், தம்மில்--தம்மைவிட, சிறத்தல் பெருமை உறுதல், மன்பதைக்கு-உலகத்தோர்க்கு, இனிமை-இன்பம் பயப்பதாகும்.



(வி-ரை.) "பிது சதகுணம் புத்ர" என்பர் வடமொழியார். "நோக்கிற் றந்தையி னூறு குணம் மகன் வாய்க்கு மென்ப வடித்தநுண் ணூலெலாம்" என்றார் பிறரும்.

இனி, தம் இல், சிறத்தல் எனக் கண்ணழித்து, தமது இல்லத்தில் சிறப்புற்று வளர்தல் என்று கொண்டு, தமக்கு மக்கள் உண்டாகித் தமது இல்லின்கண் சிறப்புற் றிருத்தல் பின்னர் உலகத்தினர்க்குப் பெரும்பயன் ஆமாறு தோன்றும் குறி எனலும் பொருந்தும். இதனால் மன்பதைக் கினிய ளுமாறு உணர்க. மன்பதை மக்கள் சமூகம் (8)

சக. சான்றவ னெனத்தா யீன்றதின் மகிழும்

(இ-ள்.) தாய்-(மகனைப்பெற்ற) தாயானவள், சான்றவன்-(அம் மகன்)சிறந்தவன்,என-என்று (பிறர்) சொல்லுங்கால், ஈன்றதில்-(அவனைப்)

பெற்றெடுத்த காலைவிட, மகிழும்-களிப்பு எய்துவாள் (எ-று.)

(வி-ரை.) ஈன்றதின் மகிழும்-என்றதனால், பெற்ற தாய்க்குப் பிள்ளை பிறப்பதே மகிழ்ச்சிக்கு ஏது என்பது பெறப்படும். "வயாவும்



வருத்தமும் ஈன்றக்காலேவும், கவான் மகற் கண்டு தாய்மறந் தாங்கு" "ஈன்ற ஞான்றி னும் பெரிதுவக் தனளே" என்பன காண்க. ().

எஎ. மகன்றரு முதவி யெவன்கொ லெனுஞ்சொல்

(இ-ள்.) மகன்-புதல்வன், தரும் உதவி-(தனது பெற்றோர்க்குச்) செய்யும் நன்றிக்கடனாவது, எவன் கொல்-(இப் பிள்ளையைப் பெறப்பெற்றோர் செய்தது) எந்த தவமோ? எனும் சொல்-(என்று) உலகத்தார் கூறும் மதிப்புரையேயாம் (எ-று.)

(வி-ரை.) நல்லவன் ஒருவனைக் கண்டு அவனது குணத்தை வியக்குங்கால் இவனைப் பெற்றவன் எந்தப் புண்ணியவானோ? என்று கூறுதல் உலக வியல்பு. அம் மொழி அவனது

உயர்குணத்தைப் புலப்படுத்தும். அதனால் எவன்கொல்? பெற்றெடுத்தவன் எவனோ தான்? என்று கோடலும் அமையும்.

உயர்குணம் உடைவன் பிறரால் புகழப் படுங்கால் தனது புகழோடு தன் பெற்றோர்க்கும் புகழை உண்டாக்கிவிடுகின்றான். எனவே, தான் நற்பெயரெடுத்து அதன்வழி தந்தை



முதன் மூதாதையர்க்கும் புகழ்தருதல் மகன் செய் கடமையாத லறிக. (10)

[இல்லறம் இனிது நடத்தலும், பிறவுயிர்கள் மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயன் ஆதலின் இனி அது கூறுகின்றார்.]

## அதி-அ: அன்பு

எக. அன்பினைக் கண்ணீ ரளந்தறி விக்கும்

(இ - ள்) கண்ணீர் - (ஒருவர் உருகி வடிக்கும்) கண்ணீரானது, அன்பினை - (அவரிடத்திலுள்ள) அன்பை, அளந்து - (மதிப்பறிந்து) அளவு வகுத்து, அறிவிக்கும் - புலப்படுத்தும் என்பதாம்.

(வி - ரை) :—அன்பினை மதிப்பதற்கு ஏனைய அளவைகள் இல்லை. உருகிக் கண்ணீர் சொரிதல் அன்பின் அறிகுறியாம்.

"பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம் பிள்ளை
பெரும்பேதை அறிவானோ பேரானந்தம்
உற்றவர்க்கே கண்ணீர் கம்பலை உண்டாகும்"

என்னும் தாயுமானவர் அமுதவாக்கே இதற்குச் சான்றாகும்.



திருஞானசம்பந்தரும் தமது தேவாரத்தில் "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி - ஓதுவார்...." எனக் கூறிக் காதலாயவர் கசிந்து கண்ணீர் பெருக ஓதுவார் என்பதுணர்த்தினர். (1)

எஉ. என்பையு முதவுவ தன்பின தியல்பு

(இ - ள்) என்பையும் - எலும்பைக் கூட, உதவுவது - அளிப்பது, அன்பினது - அன்பு என்னும் குணத்தினுடைய, இயல்பு - தன்மையாகும் என்றவாறு.

(வி - ரை) எலும்பே உடலுக்கு உறுதியாகலின், அவைகளை ஈவது எனில் உபலக்

கணத்தால் உடலையே ஈவது என்றும் கொள்ள லாம்.

உயிரைப் பிறர்க்கு அளிக்க முடியாது. ஆக வின், கொடுக்கும் பொருள்களுக்குள் உட லுக்குமேல் ஒன்றும் இல்லை யாகையினால், அவ் வுடலை ஈயும் திறத்தினால், எதையும் தியாகம் செய்யும் இயல்பு அன்பிற்கு உண்டு என்பது போதரும்.

இது ததீசி, சிபி இவர்களின் வரலாற்றால் தெளிவு. அன்பின இயல்பு என்பது அவ்



வன்மையுடையார் இயல்பைக் காட்டிநின்றது. உம்மை உயர்வுச் சிறப்பு. (2)

எஉ. உடலுயி ரன்பின் தொடர்பது பயனே

(இ - ள்) உடல் உயிர் - உடலும் உயிரும் (சேர்ந்த இம்மானிட யாக்கை), அன்பின் தொடர்பது - (முற்பிறப்பிற்கொண்ட) சம்பந் தத்தால் வந்த, பயன்-பிரயோஜனம் ஆகும் என்பதாம்.

(வி-ரை) இந்நூல் மக்களுக்கு அறிவுறுத் தப் போந்தது ஆதலின், உடல் உயிர் என்பது ஏனைய உடல்கொண்ட உயிர்களைக் குறியாது மக்களையே குறித்த தென்க. "அரிதரிது மானுடராத லரிது" எனக் கூறியாங்கு மக்கள் யாக்கையுட் பிறத்தல் அரிதாம். அவ்வரிய பயன் முற்பிறப்பிற்கொண்ட அன்பின் தொடர் பால் வந்ததாம். ஏ-அசை. அன்றிப் பிரிநிலை யிலுங் கொள்ளலாம். இதனானே, அன் பொன்றின் பயன்றான் இவ்யாக்கை என்பதும்; இவ்வுடம்பு பெற்றான் அன்பின்றி யிருத்தல் ஒல்லாது என்பதும் இதன் வழி விளக்கப் பட்டன. (3)



எ௪. அன்பகு ளார்வம் நண்புசெய் யும்மே

(இ-ள்) அன்பு-(ஒருவரிடத்தே செலுத் தப்படும்) மன இரக்கம், அருள்-அளிக்கின்ற, ஆர்வம்-(பிறரிடத்தே) கொள்ளும் ஆசையா னது, நண்பு-சிநேகத்தை, செய்யும்-உண்டாக் கும் என்பதாம்.

(வி-ரை) ஒருவர்மாட்டு அன்பு நேர்ந்த தெனில் அப்பழக்கம் மேற்படப் பிறரிடத்தும் பிரியம் விளைக்கும். அம்முறையே, பிறர் தம் மிடம் அன்பு செலுத்த இடையே நட்பு நிக ழும் என்க.

இதன் மற்றொருபொருள் வருமாறு:—

அன்பு-(ஒருவன் கடவுளிடத்தே வைக்கும்) அன்பானது, அருள்-(அக்கடவுளின்) கருணை யையும், ஆர்வம்-(அவ்வழி அக் கடவுளை அடையவேண்டும் என்னும்) அவாவையும், நண்பு-(அந்நிலையில் இருக்க, நல்லோர் என உலகமெல்லாம் தன்னைப்போற்ற உலகினரின்) நட்பையும், செய்யும்-உண்டாக்கும் என்பது.

(வி-ரை) அவனன்புற, அவனருள் இடத்து மனமகிழ்ச்சியுற, அவ்வழி “சவை

கண்ட பூனை உறியை எட்டி எட்டித் தாவுதல் போல" கடவுளின் முழு அருளையும் பெறும் ஆர்வம் பெறுகின்றான். முதலில் கொள்ளும் அன்பு "பக்தி" என்றும், அவ்வழி கடவுளின் அருள் சிறிதுற்றுப் பின்னும் பேரின்பம் பெற ஆர்வம் கொள்வதை "முமுக்ஷுத்வம்" என்றும் அறிஞர் கூறுப. (4)

எரு. ஈண்டுவ தன்பா லேனைய பின்பே

(இ-ள்) ஈண்டுவது-(முதலில்) அடையற்பாலது, அன்பு-அன்பேயாகும், எனைய-மற்ற குணங்கள், பின்பே-பின்னரே (ஏற்படும்) ஆம். (ஆல்-அசை; ஏ-தேற்றம்).

(வி-ரை) முதலில் அடைய வேண்டுவது அன்பு; மற்றவைகளைப் பின்பு கவனிக்கலாம் எனவும் கொள்க. "அன்புடையார் எல்லா முடையார்" ஆகலான் முதற்கண் அன்பு பூண்டாரெனில், ஏனைய சாந்தம், அடக்கம், பொறை முதலியன தானே உண்டாவன என்க,

முதனூற்கியைந்த இதன் பொருள் :—

விருந்து பொருந்திய நெறியில்) எய்தப் பெறுவதாகிய துறக்க வின்பமாவது, அன்பால்- அன்பு உற்று அமர்ந்த வழக்கினாலேயாம்; ஏனைய - மற்றை யின்பங்கள், பின்பு-துறக்க வின்பந்தாவல்ல இல்லற இன்பத்திற்குப் பிற்பட்டவையேயாம் என்றவாறு. (ஏ—தேற்றம்).

(வி-ரை) இவ் வாழ்க்கைக்கண் நின்று மனைவியோடும் மக்களோடும் ஒக்கலோடுங் கூடி யின்புற்றார், தாஞ்செய்த வேள்வித் தொழிலாற் றேவராய் ஆண்டும் இன்புறுவராகலின், "ஈண்டுவது" (இங்ஙன் அடையற்பாலதாய துறக்கவின்பவழி) என்றார். தவத்தால் துன்புற்றெய்துந் துறக்க வின்பத்தினை ஈண்டும் இன்புற்று எய்துதல் அன்பான் அன்றி இல்லை யென்பதாம். (5)

எசு, அறச்சார் பன்பே மறத்தினு மாகும்

(இ-ள்.) அறம் சார்பு-தருமத்திற்குத் துணையாயிருப்பது, அன்பே-அன்பொன்றே யாகும்; அவ் அன்புதான், மறத்தினும்-அறமல்லாத

காரியங்களிலும், ஆகும்-உதவியாக ஏற்படும் என்பதாம். (ஏ-தேற்றப்பொருளது).



(வி-ன்ர.) அறச் செயலுக்கு ஊக்கமளிக்கும் அந்த அன்பே, பிறர் மறச்செயல் புரியுங்கால், அவரிடங் காட்டப்படுங்கால், அவர் அச் செய லினின்றும் நீங்கற்கு முற்பட உதவியாகும் என்பது விரிந்த பொருள்.

இனி இதற்கு வேறு பொருளும் அமை யும் :—

அறச்சார்பு அன்பே-அறத்தின் சம்பந்தங் கொண்ட (அறக் கருணைக்கு ஆதாரமாகிய) அந்த அன்பே, மறத்திலும்-மறக்கருணையிலும், ஆகும்-உண்டாகும் என்பதாம்.

எனவே, அன்பின் திறத்தால் அறச்செய லும் மறச்செயலும் (வலியசெயல் என்பது பொருள்) ஆகும் என்க. உதாரணமாக:— அரசன் குடிகளின்மேலுள்ள அன்பினால் நற் குடிகளுக்குச் சன்மானமும், அல்வழிச் செல்

றார்க்குத் தண்டனையும் வழங்குவதும்; வாயக் குச் சுவைதரும் இனிய மருந்துகளை நல்கும் அதே மருத்துவன் புண்களைக் கிறிச் சத்திரம் இடுதலும்போல என்க. (6)



## எஎ. என்பில மான அன்பிலர் தீய்வர்

(இ-ள்.) என்பு இல மான-எலும்பு இல்லாத உயிர்களைப்போல, அன்பு இலர்-அன்பு என்னும் உள்ளீரம் அற்றவர்கள், தீய்வர்-சுடப்படுவார்கள். (அல்லது எரியுண்பார்கள்) என்றவாறு.

(வி-ரை.) என்பில-புழுப்போன்ற வுயிர்கள். எலும்பில்லாத உயிர்கள் சூரியவெப்பம் தாங்காது எவ்வாறு அழிகின்றனவோ, அங்ஙனமே அன்பாகிய உரமில்லாதபோழ்து அறக்கடவுளின் சிற்றத்திற்கு ஆளாகி அன்னார் அழிவர் என்க.

தீய்தல் - நெருப்பா லழிதல் என்றமை ஓர் தற்பாலது. (7)

## எஅ. அன்பிலா வாழ்வு பாலையிற் றளிர்வே

(இ-ள்.) அன்பு இலா-மனக்கனிவு இல்லாத, வாழ்வு-(உயிரின்) நல்ல வாழ்க்கையானது, பாலையில்-பாலைவனத்திலே, தளிர்வு-மரம் தளிர்த்தல்போல அரியதாம் என்றபடி. (ஏ-தேற்றம்).

(வி-ரை.) பாலையின்கண் ஈரமில்லை. மரம் ஈரத்தன்றித் தளிர்க்காது. எனவே பாலையில்



மரம் தளிர்த்தலில்லை. அதுவேபோல அன்பென்னும் ஈரம் இல்லையெனின் நல்வாழ்வும் இல்லையாம். பாலையில் மரந்தளிர்த்தல் இல்லைபோல அன்பில்லா உயிர்வாழ்க்கை இல்லையாயிற்று என்க.

இதன் மற்றொருபொருள்: அன்பில்-அன்பு என்னும் இயல்பினால், ஆ - ஆன்மாக்கள், வாழ்வு-வாழ்தல், பாலையில்-பாலைவனத்தில், தளிர்வு-(மரம்) தளிர்த்தல் போலப் பிறருக்கு மிகப் பயன்படுவதொன்றாம் என்றவாறு.

பாலையிற் செல்வார் ஆங்கு நிழல் இன்மையால் வருந்துவர். எங்கும் வெம்மை நண்ணிய அவ்விடத்து, எங்கோ அரிதாம் ஒரு மரம் சிறு

மழையினால் தளிர்த்து வளர்ந்திருப்பினும் அது கடலில் ஆழ்வார்க்கொரு பற்றுக்கோடு என்னப் பயன்படும். அவ்வாறே, உலகில் அன்போடும் வாழ்க்கை நடாத்துவோர், உலகில் அல்லற்படுவார்க்கு ஆதரவளித்து அவரது துயர்தீர்க்கப் பயன்படுவார் என்க. (8)

௭௧. அகத்தறு மன்பேற் புறத்துறுப் பெதற்கு

(இ-ள்.) அகத்து-உள்ளத்தில், அறும்-நீங்கி விடுவது, அன்பேல்-அன்பாயிருந்தால்; புறத்து



உறுப்பு-ஏனைய வெளி அங்கங்கள், எதற்கு-எப் பயனுக்காக (உளவாம்)? என்றவாறு.

(வி-ரை.) உள்ளத்தில் அன்பு இல்லையெனில் வெளி அங்கங்களாற் பயன் இல்லை என்பது கருத்து. உள்ளத்து அன்பு ஏனைய உறுப்புக்களுக்கு அழகை அளிப்பது. அவ் அன்பு இல்லை யெனில், புறத்தே பல அழகிய உறுப்புக்கள் இருப்பினும், பல செயல்கள் செய்யினும், அது உறுப்புக்களைப் பெற்ற பயனாகாது. எனவே அன்பு இல்லையாயின் செய்கைகள்

யாவும் பயனிலவாகும் என்க.

" இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும்—நல்லாய் !
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு "

என்ற நன்னெறி வாக்கும் நோக்குக. (9)

௮௦. அன்பஃ தூயிர் பிற என்புதோ லுடலே

(இ-ள்.) அன்பு அஃது உயிர்-அன்பினை உடையதுதான் உயிர் (உடைய உடலமாம்), பிற-அவ் அன்பில்லாத வேறு (சிவர்கள்), என்பு தோல் உடலே - எலும்பு, தோல் ஆகி



யவைகளைக் கொண்ட வெற்று உடல்கள்தாம் என்பது.

(வி-ரை.) ஏகாரம் தேற்றப் பொருள் தருவது. அன்புடையனவும் அன்பில்லாதனவும் தோற்றத்தில் ஒரு தன்மையனவாயிருப்பினும் உயிர் இருப்பதற் கறிகுறியும் பயனும் ஆகிய அன்பு இல்லையெனின், அவை உயிரிருந்தும்

இல்லாத நடைப் பிணங்களே யாம் என்பது தெளிந்த பொருள்.

இனி, இதனை வேறுபடுத்துக் கூறலும் ஆம்:

அன்பு-(ஒரு மனிதனுக்கு) அன்பு என்னும், அஃது-அந்த (உயர்வுடைய) குணம், உயிர்-உயிருக்கு ஒப்பாகும். பிற - ஏனைய (பொறை, ஈகை) முதலிய குணங்கள், என்பு தோல் உடலே-எலும்பு, தோல் முதலியவும் (அவற்றா லாய) உடலும் ஒக்கும் என்பதாம்.

ஏகாரம் வேறுபாடு குறிப்பதாற் பிரிநிலைப் பொருளது.

பிறகுணங்களிருப்பினும், உடலை இயக்குவன உயிர்போல அக்குணங்களின் சிறப்பைக் காட்டு வது அன்பே. உயிரின்றி உடல் அழகுறாது



போல அன்பின்றி ஏனைய குணங்கள் சிறப்புப்

பெறுவாம்.

அன்றியும், உயிர் இருக்க வேண்டு மெனில் உடலும் கடவுளால் அமைக்கப்படுவதுபோல, அன்பு இருக்குங்கால் பிற குணங்கள் இயல்பாக உறும் என்பதும் பிறவும் போதருதல் கண்டு கொள்க. (10)

[தென்புலத்தாரும் தெய்வமும் கட்புலனுகாமையானும், நினைந்து செய்வன வாகலானும், இரண்டும் பிறர்க்கீத லல்லாமையானும் இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடையதாய் இல்லறத்திற்கு முதற் கடமையாயிற்று. அது தானும் மாறுபடாத அன்புடைய இருவர் கூடியல்லது செய்யப்படாமையின், அங்ஙனம் ஒன்றுபட்டேற்கும் விருந்தினது அருமையை மேலே கூறுகின்றார்.]

## அதி. ௯ - விருந்து

அ௧. இருந்தோம்பும் வாழ்க்கை விருந்தோம்பு தற்கே

(இ-ள்.) இருந்து - ஓர்பால் அமைந்து, ஓம்பும் - ஆவனபோற்றி, வாழ்க்கை - வாழும் இல்வாழ்வு, விருந்து - விருந்தினர்களை, ஓம்புதற்கே -

பேணுவதற்காகத்தான் (ஏற்பட்டது என்பதாம்).

(வி-ரை.) வனம் முதலிய இடங்களுக்குத் தவம் செய்வான் கருதி ஓடாமல், ஓரிடத்து அமைந்து இருத்தல் இல்லறம் ஆகலான் 'இருந்து' என்றார். இல்வாழ்வான் தனது மனைவி மக்கள் முதலிய சுற்றத்தோடு ஐவகையினரைப் போற்றும் தொழிலினன் ஆகலானும், அவ்வகையினருள் பிற உலகில் திரிவார் உளர் ஆயிடினும், தன்பால் வரூஉம் துறவியர் பல்லூர்ச் செலவின் மேற்று ஆகவே, தான் ஓரிடத்திலே யிருந்து, திரிவாரைப் பேணுவான் என்பது காட்டற்கு "இருந்தோம்பும் வாழ்க்கை" என்னப்பட்டது.

ஏகாரம் தேற்றப் பொருள் காட்டும். இல்வாழ்வானது முதற்கடன் விருந்தோம்புதலாம் என்பது இப் பாட்டாற் கண்ட பொருளாம்.()

அஉ. **விருந்துபுற மாக மருந்துமா காதே**

(இ-ள்.) விருந்து அயல் ஆக-விருந்தினர் புறம்பே இருந்தாராக, மருந்தும் ஆகாது-அமிர்தமும் (உண்ணுதல்) கூடாது என்ற

வாறு.



(வி-ரை.) ஆக என்னும் வினையெச்சம் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. மருந்தும் என்பதில் உம்மை உயர்வுச் சிறப்பு. மருந்தும் ஆகாது எனவே எவ்வுணவும் ஆகாதென்பது கூறல் மிகை. கிடைத்தற்கு அரியது மருந்து. அது கிடைக்கினும் அம் மருந்தை விருந்தினரிலும் மேம்பட்டதாகக் கொள்ளுதல் தகாது. எனவே விருந்தோடு உண்ணுவது கூழாயினும் அது ஆகும் என்னும் பொருளும் இதன்கண் ஒலித்தல் காண்க.

"மருந்தே யாயினும் விருந்தோ டுண்" என்ற ஔவையார் திருவாக்கு இதனை வலியுறுத்தும். இதனானே விருந்தின் சிறப்புக் கூறப்பட்டது. (2)

அங. **விருந்தோம்பு மில்லம் வருந்துமா றில்லை**

(இ - ள்.) விருந்தும் ஓம்பும் இல்லம் - விருந்தினர்களை உபசரிக்கும் வீட்டிலுள்ளார், வருந்துமாறு இல்லை - வருந்துவது என்பது இல்லையாம்.

(வி - ரை.) இல்லம் என்றது இல்வாழ்வார் மேல் நின்ற ஆகுபெயர். இல் வாழ்வார் யாவ ரும் வருந்தார்கள் என்பது கருதற்பாற்று.



என்னை ? விருந்தோம்புங்கால் தலைவன் தலைவி யாவரும் ஒருமை நெஞ்சத்து அன்பொடும், வருவாரை அருமை பொலிய ஓம்புவர் ஆக லான் என்க. அன்றியும் தலைவன்றானே நல் வினையாற்றினும் இல்லவட் கொரு பங்குண் டென்பது சுருதி யாகலானும் என்க.

வருந்துவ தின்மையான் இன்பம் பெருகும் என்பதூஉந் தோன்ற நின்றது ஓர்க. வறுமை, நோய் முதலியன அவர்களை அணுகா தகலுவ ஆம். இதனானே விருந்தோம்புவார் இன்புறு வார் என்பது கூறப்பட்டது. (3)

அச. நல்விருந் தில்லிற் செல்விவந் துள்ளாள்

(இ - ள்.) நல் விருந்து இல்லில் - நன்மை தரும் விருந்தினர்களைக் கொண்ட வீட்டில, செல்வி வந்து உள்ளாள் - திருமகள் வலியப் புகுந்து நீங்காது உறைவாள் என்றவாறு.

(வி - ரை.) விருந்தினர்கள் தமது காட்சி யாலும் உணர்வாலும இல்வாழ்வார்க்கு நலம்

தருதலால் ‘நல்விருந்து’ என்னப்பட்டது. ‘வருந்துமாறு இல’ ராக்குதலானும் ‘நல விருந்து’ ஆயினுறென்க. செல்வம் உடையாள்





செல்வமே அவளாகலான் திருமகளைச் செல்வி' எனக் கூறினர், “மங்கலக் கழுத்திற் கெல்லாந் தாணணி” என்பார் கம்பரும்.

வருவது துணிபு; அன்றியும் விரைவில் எய்துவள் ஆகலின், விரைவு கருதி 'உள்ளாள்' என இறந்தகாலச் சொல்லாற் கூறப்பட்டது. என்னை? உண்ணப்போகும் ஒருவனைக் கூப்பிடுங்கால் “இதோ உண்டு வந்தேன்” என்று அவன் விடை கூறுதல் மரபாகலான். (4)

அ௫. விருந்தோம்பி னிலத்தில் வருந்தாத பலனே

(இ-ள்.) விருந்து ஓம்பின்-விருந்தினர்களை உபசரித்தால், நிலத்தில்-(அவ்வுபசாரம் செய்வாரது) நிலத்தில், வருந்தாத பலன்-உழைக்காமற் பெறும் விளைவு (உண்டாகும்) என்பதாம்.

(வி-ரை.) விருந்தினரை உபசரிப்பதானது நிலத்தில் என்பதே பொருளாக "விருந்தோம்பி + நிலத்தில்" என்றுகோடலும் பொருந்தும். ஓம்புபவன் ஓம்பி - வினையாலணையும் பெயர். இனி நிலத்தில் என்பதற்கு உலகில் என்று கொண்டு, இல்வாழ்வான் விருந்தோம்பி



னால் அவ்விருந்தினர்களாகிய துறவியர்கள் தவம் முதலிய சயற்கரும் செயலாம் உழைப்பின்மேற் பெறும் பயனைத் தான் அவ்வண்ணம் உழைக்காமலே பெறுவான் என்பதும் அமையும். ஏ-அசை. இதனால் விருந்தோம்புதலின் பயன் கூறப்பட்டது. (5)

அ௬. **விருந்துகாப் போனை விரும்புமால் வானே**

(இ - ள்.) விருந்து காப்போனை-விருந்தினர்களைப் பேணும் இல்லறத்தானை, வான் விரும்பும்-வானவர்கள் விரும்புவார்கள் என்றவாறு. ஏ, ஆல்-அசைகள்.

(வி - ரை.) தமது நாட்டுள் வைகி இன்பம் துய்க்க அவனை எதிர்பார்த்திருப்பார்கள் வானவர் என்க. இனி, ஏகாரத்தை உயர்வுச் சிறப்பாகக்கொண்டு வானவர்களே விரும்புவார்கள் எனக் கொள்ளுமிடத்து, மண்ணவர்களும் ஏனையவர்களும விரும்புவார்களென்று கோடலும் ஒன்று. வான் என்றது வானவர்கள்மேல நின்றது ; ஆகு பெயர்.

இது விருந்தோம்புவான் மறுமைக்கண் எய்தும் பயன்கூறியவாறு. (6)



அஎ. **விருந்தினற் பயனதன் வரம்பினத் துணையே**

(இ - ள்.) விருந்தின் நல்பயன்-விருந்தோம்புதலால் உண்டாகும் நல்ல பேறு, அதன் வரம்பின் அத் துணையே—அவ்விருந்தோம்புதலின் அளவிற்கு இயைந்த அந்த அளவினதேயாம்

என்றவாறு.

(வி-ரை.) விருந்தோம்புதலின் பயன் அவ் விருந்தின் தகுதியைப் பொறுத்தது என்பதாம். அதன் வரம்பு, செய்வான் தகுதி விருந்தின் தகுதி ஆதியவைகளைப் பொறுத்ததாகலான், அவ் விருந்தின் பயனும் அற்றே என்க. கடலுண் மழை பெயலும், களருட் பால் பெய்தலும் போல் பயனின்மையும் "கானல்காட்டிற் கனமழைபெய்த"லன்ன செயலின் பயனுண்மையும் வரம்பிற்கு எடுத்துக் காட்டுகள். ஏ-ஈற்றசை.

இது விருந்தின் பயன் அளவிடற்கரிய தென்று தெரிவித்தவாறு.

௮௮. வருவிருந் திகழ்ந்தோ ரரும்பொரு ளிழந்தார்

(இ-ள்.) வரும் விருந்து இகழ்ந்தோர்— தம்பால் வருகின்ற விருந்தினர்களை உபசரி



யாது புறக்கணித்தவர்கள், அரும் பொருள் இழந்தார்-அருமையான செல்வத்தை இழந்தனர் (என்று கருதப்படுவர்) என்றவாறு.

(வி - ரை.) விருந்தினை இகழ்ந்தவர்கள் தம் பொருளை விருந்தினர்க்குப் பயன்படுத்தின் குறைவுறும் என்று கருதுவர். அங்ஙனம் செலவு கருதி இகழ்பவர்கள் பின்னரேனும் பொருளைச் செலவு செய்யாது வைத்துளரோ எனின், அற்றன்று; எவ்வாறேனும் பொருள் முழுமையும போக்கினர் என்பது இப்பாட்டுக் காட்டும்.

இனி, விருந்து இகழ்ந்தார் பொருளை வேறு எவ்விதத்திற் போக்கினும் பயனின்றிப் பொருளை இழந்தார் ஆவார். அங்ஙனின்றி, விருந்தினர்பாற் செலவிட்டுப் போக்கினும் அத் துணை நற்பயன் கோடலால் இழந்தவ ராகார என்பதூஉம் இதன்கட் பெறப்படும்.

அன்றியும், வரும் விருந்தினர்களை இகழ்ந்த வர்கள், விருந்தினர்களாகிய அரிய பொருளை இழந்தவராவார் என்பதும் ஒன்று. என்னை ? செல்வம் வாழ்வு தருதல்போல விருந்தும மறுமையில் நல்வாழ்வு தருதலால் என்க.

பொருள் பலவாயினும் விருந்தாகிய செல்வம் யாவர்க்கும் கிடைப்பதன்றி, இல்வாழ்வார்க்கே கிடைப்பதொன்றாகலானும், அது வும் ஏனைய பொருள்கள்போல் வருந்தி ஈட்டுதலின்றித் தாமே வருவதாலும் அது சிறப்புடையது என்பது தோன்ற 'அரும்பொருள்' என்னப்பட்டது.

மேலும், பொருள் அருமையான தொன்றாகலான் அதனை அரிய வழியிற் பயனுறச் செய்தல்வேண்டும் என்பதும், அவ்வழிதான் விருந்தோம்புதல் என்றும், அஃதை ஒருவினவழி அச் செல்வம் இருந்தும் பயன் இன்மையின் இழந்ததொக்கும் என்பதும் போதருதல் காண்க. "கொன்னே, வழங்கான் பொருள் காத்திருப்பானேல் அ ஆ! இழந்தான் என்று எண்ணப்படும்" என்ற நாலடியார் கூற்றும்

நோக்குக.

“இருந்தோம்பும் வாழ்க்கை” [81] உடையனாதலால், விருந்து இவன்பால் “வருவிருந்து” ஆயிற்றென்க! (8)

**அக. செல்வத்துள் வறுமை விருந்தேலாச் சிறுமை**

(இ-ள்.) செல்வத்துள் வறுமை-செல்வம் (நிறைந்துள்ள) வாழ்க்கையில் உளவாகும்.



தரித்திரம் ஆவது; விருந்து ஏலா சிறுமை-விருந்தினர்களை ஏற்று உபசரிக்காத புல்லிய தன்மையாலே ஆம் என்றவாறு.

(வி-ரை.) செல்வம் உடையனாயினும் விருந்தோம்பானேல் வறியனே அவன். என்னை? செல்வத்திற்கு விருந்தோம்புதல் பயன். பயனில் செல்வம் வறுமையே யாகலான் என்க. விருந்து ஏலாமை சிறுமை ஆகலான், விருந்தேலாச் சிறுமை என்னப்பட்டது. எனவே விருந்து ஏற்குமது பெருமையாம் என்பதும் புலப்படும். ஏலா என்னும் பெயரெச்சம் உபலக்கணத்தால் ஓம்பா என்னும் தொடரையும்

கொள்ளும் என்க.

இனி, விருந்தோம்பாச் சிறுமை யென்னுது விருந்தேலாச் சிறுமை என்ற தென்னை? ஓம்பு

தல் பின்னுயினும் வரும் விருந்தை ஏற்றல் முன்னுகலானும், விருந்து மகிழ்வது ஏற்பதிலேயே ஆகலானும் என்க.

"வந்த விருந்து மலராத வதன
நோக்கு முன் குழையும்"

—என்பது விநாயக புராணம்.

எனவே முதற்கண் விருந்தினரை நல்வரவேற்றுபசரித்தல் கடன் ஆமாறு இது கூறிற்று. (9)



## ௧0. நோக்கினே திரியும் பூக்கன விருந்து

(இ-ள்.) கன விருந்து - கண்ணியம் பொருந்திய விருந்தினர்கள், நோக்கின் + ஏ-(விருந்தினை ஏற்போரது) பார்வை யளவிற்றுனே, திரியும்-வேறுபடும தன்மையுள்ள, பூ-மலராவர் என்பதாம்.

(வி-ரை.) பூ + இன் + கு-பூவிற்கு என்னற் பாலது இன்சாரியை பெறாது, மலருக்கு என்னும் பொருள் தந்து அ(ன்)ன-ஒப்பானவர்கள் என்று நிற்பதும் கொள்ளலாம்.

பார்க்குமளவில் மாறுபடும் மலர் விருந்தே யன்றி வேறு இன்மையின் இஃது இலபொருளுவமை; வானத்தாமரை போன்று கனம்-பெருமை; மேலே "கனமழை" [வான் - 15] என்றாங்கு.

மலர்கள் வெம்மையால் வாடும். அனிச்சம் ஆகிய மென்மலர்கள் மோப்பக் குழையும். அதனினும் மிக மென்மையான தன்மையுடையோர் விருந்தினராதல் பெற்றாம். நோக்கினால் திரியும் மலர் ஒன்றுண்டேல் அதற்கு ஒப்பாகும் விருந்து என்க.



திரியும் என்பது மாறுபடும் என்னும் பொருள் தரும். 'வாடும்' என்னாது 'திரியும்' என்றது என்னையெனின், அம் மாறுபாடு, நோக்கின் தன்மையைப் பொருத்த தாகலான்,

இன்முகத்தோடு நோக்கின் இன்னும் நன்கு ஒளிர்கின்ற மாறுபாடும், கடுமுகத்தோடு நோக்கின் வாடுகின்ற மாறுபாடும் உண்டாகும் ஆகலான் என்க.

எனவே, இன்முகங்காட்டி ஏற்றால் விருந்தினர்கள் மகிழ்வர் என்றும், கடுமுகங்காட்டி ஏற்றால் குழைவர் என்றும் பெற நின்றது ஓர்க.

ஏ - பிரிநிலை ஏகாரம். விருந்து, அன—என்றது ஒருமை பன்மை மயக்கம்.

இனி, மலர்போன்ற தன்மையுடைய விருந்தினர்கள் பார்த்தாலே வேறுபடுவார்கள் என்று கூறுதலும் ஒன்றும். நற்பார்வையெனின் நல்ல வேறுபாடு என்றும், அல்லதெனின் அற்றே என்றுமா கண்டு கொள்க.

நனைமை தருவதாலும், இன்றியமையாமையாலும் நல்லோர் மகிழ்ந்து ஏற்பதாலும், எற்பார் அனடுகண்டு மலர்வதாலும் விருந்தினர் மலருக்கு உவமிக்கப்பட்டனர் என்க. (10)

[இனி இல்லறத்தினை நல்லறமாக்கும் விருந்தினரை ஏற்பாருக்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய இன்சொல்லின் இயல்பு மேற்கூறுகின்றார்.]

## அதி. ௧௦ - இன்சொல்

௯௧. அன்பளைஇ வஞ்சனை யறுவதே யின்சொல்

(இ-ள்.) அன்பு அளைஇ-அன்புடன் கலந்து, வஞ்சனை அறுவதே-வஞ்சகம் இல்லாத சொற்களே, இன் சொல்-இனிய சொல்லாம் என்றவாறு.

(வி - ரை.) சொல், முதற்கண் அன்பினதாயிருத்தல் வேண்டும். வஞ்சிப்பாரும் மயக்குந் தன்மையுடைய சொற்களைக் கூறுவாராகையால் அச்சொல் வஞ்சனை யறுவதாக வேண்டும் என்றார்.

அன்பு அளைதலால் புற இலக்கணமும், வஞ்சனை யறுவதால் அக இலக்கணமும் அமைந்ததே இன்சொல்லாகும் என்பதாம்.

இதனானே இன்சொல்லின் இலக்கணம் கூறப்பட்டது. ஏ-பிரிநிலை ஏகாரம், பிற அன்று என்னும் பொருள் தரலால். (1)

**கூ. அகமகிழ் வீகையின் முகமலர் வினிது**

(இ - ள்.) அகம் மகிழ்வு - நெஞ்சத்தின் மகிழ்தலையுடைய, ஈகையில-தருமத்தைக் காட்டினும், முகம் மலர்வு-முகம் மலர்ந்து விளங்குவது, இனிது-இனிமை தருவதாகும் என்றவாறு.

(வி-ரை). நெஞ்சம் உவத்தலானது வருவோர் காணும்போதில்லாது, பெறுங்காலே இன்பமளிக்கும். அற்றன்றி, முகமலர்வு எனின் காணும்போதே இன்புதரும் ஆகலான் அஃது இனிதாயிற்று என்க.

நெஞ்சம் உவத்தல் இன்றி முக மலர்வு மட்டும் இருத்தலினாற் பயனென் எனின்; அவ்வாறு இராதென மறுக்க. என்னை? நெஞ்சத்தின்கட் டோன்றிய மகிழ்ச்சி, உணர்ச்சியினை முதிர்க்க காலையிற்றான் முகமலர்வு உண்டாகுமாதலான். "அகத்தினழகு முகத்திற் றெரியும்", "உளத்தன வாண் முகத்தனவாயுநிகழும்" என்பன கருதுக.

இனி இதனை வேறு முறைப் பொருளினும் காணலாம்: நெஞ்ச மகிழ்வோடு கொடுத்தல்லி



(கொடுக்குங்கால்) முகமலர்வு இனிதாம் என்பது. ஈயுங்கால் "ஒப்புடன் முகமலர்ந்தே உபசரித் துண்மை பேசி உப்பிலாக் கூழிட் டாலு முண்பதே யமுதமாகும்" ஆதலின், இவ்வுரையும் சிறக்குமா றறிக. (2)

௩௩. அலர்முக மினியநோக் ககச்சொல தறமே

(இ - ள்.) அறம்-அறம் என்னப் பெறுவது, அலர்முகம் இனிய நோக்கு அகச் சொல்லது-மலர்ந்த முகம், இனிமைதரும் பார்வை, மனமாரக் கூறும் இன்சொற்களைக் கொண்டு செய்யப்படுவதே யாம்.

(வி - ரை.) அறம் செய்யுங்கால் பிறர்மாட்டு முகமலர்வுடன் இனிய நோக்குடனும், நெஞ்சத்திலிருந்து வரும் இன்சொல்லோடும் கொடுத்தல் வேண்டும் என்பது தேர்ந்த பொருள்.

அகச் சொல்-அக (உள்ளத்திலிருந்து வரும்) சொல்; அது வன்சொல ஆகாதோ எனின், முகமலர்வு இனிய நோக்கு என்பவைகளால் அஃது இன்சொல் ஆமாறு தெள்ளிதிற் பெறப் படும் என்க.



இனி, இதன் முறை வைப்பை நோக்குவாம். வருவார் தூரத்தே வரும்போழ்தே முகத்தால் வரவேற்றலும், சற்று அணுகியவுடன் நோக் கால் வரவேற்றலும், அணுகியவுடன் சொல் லால் வரவேற்றலும் வேண்டும் எனலை இம் முறை வைப்பு உணர்த்துவதறிக. (3)

கச. இன்சொலான் றுன்ப வின்மையு ணீங்கும்

(இ - ள்.) இன் சொலான்-இனிய சொல்லைக் கூறும் இயல்பினையுடையவன், துன்ப இன்மை யுள் நீங்கும்-துன்பத்தைத் தரும் வறுமையி னின்றும் நீங்குவான் என்பதாம்.

(வி - ரை.) வறுமை எல்லாவிதமான துன் பத்தையுந் தருதலான் அதனைத் "துன்ப (ந்தரும்) இன்மை" என்று பண்புத்தொகை யாற் குறிக்கப்பட்டது.

"* * எல்லாங் கொடுக்கும்
மிடியாற் படியில் விதனப் படாா"

—கந்தரலங்காரம்.

இன்சொல் லுடையான்பால் யாவரும நண்பு கொண்டு உற்றுழி உதவுவர் ஆதலின் அவ னிடம் வறுமை இராதென்க. மேலும் இன் சொலுடையன் நல்லறுதலின் பிறரால் அவன் துன்புறுத்தப் பெறுன்; அவாது உறவால் இன்மையால் நலியாமையெய்துவன் ஆதலின் முறையே துன்பமும் இன்மையும் அடையாது



இன்புறுவான் என்னலும் பொருந்தும். இவ் வழி "துன்பவின்மை' என்பது உம்மைத் தொகை ஆயது தேர்க. (4)

கூடு. இனியவும் பணிவு மணிகல மென்ப

(இ - ள்.) இனியவும்-இனிய சொல் கூறுத லும், பணிவும்-செல்வமுற்றவழி தாழ்மைப் பண்புடைமையும், அணிகலன்-(ஒருவனுக்கு) அணிகின்ற ஆபரணங்கள், என்ப-என்று (ஆன்றோர்) கூறுவர்.

(வி-ரை.) இனிய என்னும் பொதுப் பெயர் சொலலிறகானது இவவதிகாரம் இன்சொல் என்னும் பெயர்த் தாதலின். இனியவும் என் பதைப பொதுப் பெயராகவே கொண்டு இன் சொல முதலாய இனிய குணங்களும், அக் குணங்கள் கொண்டதாற் றருக்காத தாழ்மை யும் அணிகலன் என்பார்கள் என்றும் கூற லாம். ஒழுககமாம் உடற்கு இவை அணிகலன் ஆம என்க.

அவ்வணிகலனை யணிந்து அவையே அணி யத் தக்கவை யென அநுபவமுகத்தா லறிந்த ஆன்றோர்கள் கூறுவார் ஆகலான், அவை உயர்ந்தவாகக் கோடற் குரியன என்ற பொரு ளுஞ் சிறநதமை காணக.

கூகூ. அறமிகு மினியன வாய்ந்துரை செயினே

(இ - ள்.) இனியன-இன்பம் பயக்கும் சொற் களை, ஆய்ந்து-ஆராய்ந்து, உரைசெ(ய்)யின்-

பேசினால், அறம் மிகும்-(அவ்வாறு பேசுவார் பால்) தருமப்பயன் விஞ்சி நிலவும் என்றவாறு.

(விரை.) தான்கொண்ட அறத்தைச் சிறப்புறச் செய்ய வேண்டிய ஒருவன் இனிய கூறுதலே சாலும் என்பது ஈதன்வழி காணும் பொருள். உள்ளந் தூய்மை யில்வழி இன்சொலும் அறப்பயனும் இலவாமாதலின் இன்சொல் மனத் தூய்மையான் வருமென்க.

அங்ஙனின்றி வஞ்சரும் இனிய கூறுதலின் இனியவும் அல்லாதனவும் கலந்திருத்தலின் இனியன ஆய்தல் வேண்டுமென்பார் 'ஆய்ந்து உரைசெயின்' என்றார். (6)

கஎ. நயன்நன்றி யீனும் பயனீனு மின்சொல்

(இ-ள்.) பயன் ஈனும் இன்சொல்-(பிறர்க்கு மகிழ்ச்சியாகின்ற) பிரயோசனத்தைத் தருகின்ற இனியசொற்கள், நயன் நன்றி ஈனும்-(கூறுபவருக்கு) நீதியையும் உதவியையும் கொடுக்கும் என்பதாம்.

இனி, இதனை வேறு முறையினும் கொள்ளு தல் கூடும். நயனையுய நன்றியையும் தரும் ஒரு பயனை இன்சொல் ஈனும் என்பதாம். இன் சொல் பயனீனும்; அப்பயன் யாது? என் பார்க்கு நயனும நன்றியு மீவதே அப்பயன் என்பது இப்பொருளாற் காண்க. (7)



கஅ. சிறுமைதீ ரின்சொல் மறுமையு மினிது

(இ-ள்.) சிறுமை தீர்-புலலிய தன்மைகளி னின்றும் நீங்கிய, இன்சொல்-இனிய சொல், மறுமையும்-மறுமையினும், இனிது - இனிய தாம் என்றவாறு.

(வி - ரை.) மறுமையிலும் இனிமை பயப்ப தோன்றும் என்பது பொருள். உம்மை ஆக்கப் பொருளில் வந்தது ; இம்மையிலும் இனியது என்னும் பொருளைக் காட்டும்.

இனி, பிறர்பாலுள்ள சிறுமையைத் தீர்க்கும் இனியசொல் என்பதும் அமையும். என்னை? வலியார் மாட்டும் பகைவரிடத்தும் இன்சொல் அவர்பாற் காணும் மறச்செயலாம் புன்மையை நீக்கி, நன்மையே தருதலான் என்க. இம்மை (இப்பிறவி)யில் சிறுமை தீர்க்கும் இன்சொல் மறுமையிலும் இனிய ஆக்கும் என்பது அம்முறையிற் காணும் பொருள்.

இதனானே இன்சொல்லின் பயன் கூறப்பட்டது. (8)

கூகூ. இன்சொ லின்பங்கண் டென்கொலோ வன்சொல்

(இ-ள்.) இன்சொல் இன்பம் கண்டு-இனிய சொல்லால் வரும் இன்பத்தைப் பார்த்தும், வன்சொல் என்கொல-கடிய சொற்களைக் கூறுதல் எதனாலே என்பதாம்.



(வி-ரை.) கண்டு என்பதில் உம்மை தொக்கிற்று. தம்மாட்டு ஒருவர் இன்சொல் வழங்கினால் அச்சமயம் தாம்பெறும் இன்பமும்,

அங்ஙனம் வழங்கி வருதலான் பிறராற் போற்றப் பெற்று அன்னவர் அடையும் இன்பமும் இதனுள் அடங்கும் என்க. ஓ-அசை. (9)

## ௱. கனியிருப்பக் காய்கவர்ந் தற்று இனிய பேசாமை

(இ-ள்.) இனிய பேசாமை-இன்சொற்களை ஒருவன் பேசாதிருத்தல், கனி ஒரீஇ காய் கவர்வு-பழத்தை வெறுத்துக் காயைக் கொள்ளுதல் போலாம் என்றவாறு.

(வி-ரை.) இனிய பேசாமை கனி ஒருவுதல். காய் கவர்வு என்றதற்கு ஒப்ப வன்சொற் கூறுதல என்பதும் வருவிக்க. இன்சொல் பேசாது வன்சொற் கூறுதல் தகாது என்று உரை விரித்துக்கொள்க.

எனவே, உரையாடலின் பயன் கொள்வார், மன்றிலும், எவ்விடத்தும், இனிய சொற்களையே பேசுதல அவசியமென்பது இதனாற் பெறக் கிடந்தது காண்க. (10)

நூற்பா-நூறக்கு
திரு. கி. வா. ஜகந்நாதன் எழுதிய
உரை முற்றிற்று.

---

சீர் கருணீக குலதிலக

சுகவனம்-சிவப்பிரகாசனார்

இயற்றிய

# குட்டிக்குறளின்

முதற் சூத்திரமாகிய நூற்பா ஒன்றிற்கு

தமிழ்ப் பேராசிரியர்

பல்லாவரம்-மறைமலையடிகளார் மாணவர்

திரு. இளவழகனார்

விரித்துரைத்த

## தனித் தமிழ் விளக்கப் பேருரை

வருமாறு.

---

# குட்டிக்குறள்

நூற்பா - விருத்தி

முதல் அதிகாரம் - கடவுள்

(முதல் நூலில் உள்ள 'கடவுள் வாழ்த்து'

என்னுந் தலைப்புப் பெயர் இங்கே 'கடவுள்' என்று நிறுத்தப்பட்டது. அதாவது, ஒரு நூல் எழுதத் தொடங்கும் நல்லிசைப் புலவன், தொடங்கும்பொழுதே, நூலின் முதலில், தான் வழக்கமாக வழிபட்டு வணங்கி வருகிற கடவுளையாவது அல்லது எடுத்துக்கொண்ட நூலின் கருத்துக்கு இயைந்த கடவுளையாவது வாழ்த்துதல். அவைகளில் இங்கே அமைந் திருப்பது, எடுத்துக்கொண்ட நூலின் கருத் துக்கு இசைந்த கடவுளின் வாழ்த்தாகும். இதையே எற்புடைக் கடவுளின் வாழ்த்தென்று கூறுவது வழக்கம்.

இந்நூல், மக்களாய்ப் பிறந்தவர்கள் மேற் கொள்ளவேண்டிய உறுதிப் பொருள்கள் நான் கில் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருள்களைமட்டும் எடுத்து விளக்கி,



அவைகளின் வாயிலாக வீட்டுப் பொருளையுந் தெளிவிக்கின்றது. அறம்[1] அந்தண்மையாலும், பொருள்[2] அரசாண்மையாலும், இன்பம்[3] வேளாண்மையாலும் உண்டாகிப் பெருமை

யடைகின்றன. அறம் முதலாய மூன்று பொருள்களும், அந்தண்மையாகிய மூன்று தன்மைகளும் நான்முகன் முதலாகிய மூவர்க்கும்முறையேஉரிமையானவை. ஆதலால் அறம் முதலாகிய மூன்று பொருள்களையும் கூறத் தொடங்கும் நூலாசிரியர் அம மூன்றோடு தொடர்புடைய மூவர்க்கும் பொதுவாக இக் கடவுள் வாழ்த்தை அமைததிருக்கின்றார்.

இந்நூல், தெரிந்துகொள்ளக்கூடிய மூன்று பொருள்களையுங் கூறி, அம மூன்றுக்கும் வேறாய், அவைகளைப்போல் தெரிந்துகொள்ளக் கூடாத வீட்டுப் பொருளைத் தெரிவிப்பது போல், இக் கடவுள் வாழ்த்தும அறிந்து கொள்ளக்கூடிய மூவர்கரும் வாழ்த்துக் கூறி, அம் மூவர்க்கும் வேறாய், அறிந்துகொள்ளக் கூடாத முழுமுதற் கடவுளை வாழ்த்து கின்றது.

1 சத்துவம் 2 இராசசம் 3 தாமசம்

இது முப்பொருள்களைப்பற்றிக் கூறும் நூலானாலும் வீட்டுப் பொருளைத் தெளிவிப்பதே இதன் உட்கருத்தாம் என்பதை, "அறனறிந்தேம், ஆன்ற பொருளறிந்தேம், இன்பின் திறனறிந்தேம், வீடு தேளிந்தேம்" என்று சிறப்புப்பாயிரம் அளித்த் கோடிஞாழன் மணிபூதனர், அறத்தையும் பொருளையும் இன்பத்தையும் அறிந்தோம் என்றும் வீட்டை மட்டும் தெளிந்தேம் என்றும் சொல்லியதாலும் அறியலாம்.

ஆகவே, இது மூவராயும் அவர்க்கு வேறாயும் விளங்கும் முதற்கடவுளின் வாழ்த்தென்று கொள்ளப்படும். கடவுள் மூவராகவும் அவர்களுக்கு வேறாகவும் அவரின் தலைவராகவும் உள்ளவர் என்பது: "படைத்து அளித்து அழிப்பமும் மூர்த்திக ளாயினை" (திருவெழுகூற்றிருக்கை, ச); "மூர்த்தியாய் மூவரின் முதல்வனாய் நின்றவன்" (திருமழபாடி, ச) என்னுந் திருஞானசம்பந்தப் பெருமான் தேவாரத்தாலும் பெறப்படும்.

"வாழ்த்து" என்பது வாழ்த்துவதற்கு எடுத்துக்கொண்ட பொருளின் உயர்நத

இயல்பை விளக்கிச் சொல்லுதல். "மூவரில் ஒருவனை எடுத்துரைத்தன்று"[1] "என்னேரு மறிய எடுத்துரைத்தன்று"[2] என்று கடவுள் வாழ்த்தும் இயன்மொழி வாழ்த்தும் இன்னவை என்று கூறும் புறப்பொருள் வெண்பா மாலை யடிகளும் வாழ்த்தென்பதை எடுத்துரைத்தலாகவே கொள்ளுகின்றன.

அவ்வாருனல், கடவுளை வாழ்த்துவதாகிய சிவஞானபோதத்தின் மங்கள வாழ்த்துப் பாட்டுக்கு உரை வகுக்கும்போது ஆசிரியர் சிவஞான முனிவர் "வாழ்த்தும் வணக்கமும் பொருளியல்பு உரைத்தலும் என மங்கல வாழ்த்து மூவகைப்படும்; அவற்றுள் இது பொருளியல்பு உரைத்தல் எனக் கொள்க" என்று கூறுவதால் வாழ்த்தென்பது மூன்று பிரிவாக வகைப்படுவதாகவும், இங்கு, அதனை எடுத்துரைத்தலாகவே கொள்ளுதல் எவ்வாறு பொருந்தும் என்ருல், நன்று கேட்டாய். வாழ்த்தும் வணக்கமும் ஆழ்ந்து ஆராயும் போது பொருளியல் புரைத்தலிலே அடங்குவ

தால் இவ்விடத்துக்கு ஏதும் பிழைபாடு இல்லை யென்றறிக.

'வாழ்க' என்றாவது 'இன்னது வேண்டும்' என்றாவது சொல்லாமல் வணக்கங் கூறப்படும் பொருள்களை முதன்மையாகவும் கொள்ளாமல், கோவலனும் கண்ணகியும் பிறந்து வளர்ந்து மணம் செய்துகொண்ட செய்திகளை மட்டும் விரிவாக எடுத்துரைக்கும் பகுதியொன்று சிலப்பதிகாரத்தில் மங்கள வாழ்த்துப் பாடல் என்று பெயர் பெற்றிருக்கின்றது. பழங்காலத்துத் தமிழிலக்கண இலக்கிய நூல்களெல்லாமும் இங்ஙனமே எடுத்துக்கொண்ட கடவுளின் இயல்பைக் கூறிப் போவதையே கடவுள் வாழ்த்தாகக் கொண்டிருக்கின்றன.

"ஊர்ந்தது ஏறே சேர்ந்தோள் உமையே
செவ்வான் அன்ன மேனி அவ்வான்
இலங்கு பிறைஅன்ன விலங்கு வால் வையெயிற்று
எரிஅகைந்து அன்ன அவிர்ந்து விளங்கு புரிசடை
முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி

மூவா அமரரும் முனிவரும பிறரும்
யாவரும் அறியாத் தொன்முறை மரபின்
வரிகினர் வயமான் உரிமை தைஇய

98. குட்டிக்குறள்

யாழ்கெழு மணிமிடற்று அந்தணன்
தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே '1

என்றும்,

" கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பின் தாருங் கொன்றை
ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வே றென்ப
கறைமிடறு அணியலும் அணிந்தன்று அக்கறை

மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே
பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்
பிறைநுதல் வண்ணம் ஆகின்று அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே
எல்லா உயிர்க்கும் ஏமமாகிய
நீர் அற அறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோர்க்கே"2

என்றும்,

> நீல மேனி வாலிழை பாகத்து
> ஒருவ னிருதாள் நிழல்கீழ்
> மூவகை உலகும் முகிழ்த்தன முறையே"[3]

என்றும் மிகப்பழைய நூலகளின் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களெல்லாம கடவுளியல்

---

1 அகநானூறு. 2 புறநானூறு. 3 ஐங்குறுநூறு.



பினையல்லாமல் வேறெவற்றையுங் கூறுமை காண்க. ஆகவே, முதற் கடவுளின் இயல்பான உண்மை நிலையையே இக் கடவுள் வாழ்த்தும் எடுத்துரைப்ப தாயிற்று.

ஆனல், பிற்காலத்திய தமிழ் நூல்களிலெல்லாம் பெரும்பாலாக, அவைகளை எழுதிய ஆசிரியன்மார்கள், முன்னேர் கொண்டிருந்த முறையைக் கைவிட்டு 'எமக்கு இது வேண்டும்; அதை அருள்செய்க' என்று வேண்டிக்

கொள்ளுங் கருத்தை அமைத்துக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்கள். ஆதலால் கடவுளின் இயல்பை எடுத்துச் சொல்லுவதே கடவுள் வாழ்த்து என்னும் பழைய முறையைத் தெரிவிப்பதற்காகவே இந்த வழிநூலின் முதல் அதிகாரம் முதல்நூலில் உள்ள கடவுள் வாழ்த்து என்னுந் தலைப்பெயரை அப்படியே தானும் அணியாமல் 'கடவுள்' என்று மட்டும் அணிந்துகொண்டதென்க. ஈகையை எடுத்துச் சொல்லும் அதிகாரம் 'ஈகை' என்றும், புகழை எடுத்துச் சொல்லும் அதிகாரம் 'புகழ்' என்றும் அதிகாரப் பெயர் கொண்டதுபோலக்





கடவுளை எடுத்துச் சொல்லும் அதிகாரமும் 'கடவுள்' என்று பெயர்பெற்றது.

அங்ஙனமானல், இவ் அதிகாரம் கடவுளின் உயர்ந்த நிலையை மட்டும் எடுத்துச் சொல்

லாமல் அதனேடு உயிர்களின் நிலையையும் மலத்தின் தன்மையையும் ஆக முப்பொருள் களின் உண்மை இயல்களை யெல்லாம் எடுத் துரைக் கின்றனவே; அதுவுங் கடவுள் வாழ்த் தாவது எவ்வாறு என்றால், மலத்திலிருந்து உலகத்தை உண்டாக்கி, மலத்தால் மறைக்கப் பட்டு வருந்திக் கொண்டிருக்கும் உயிர்களை அவ்வுலகத்திற் பிறப்பித்து, அவ் உலகத் தோடும் உயிர்களோடும் உடனாக இருந்து அவற்றை அசைவித்து, அவ்வகையாகச் செய் யும் அருட்செய்கையால் உயிர்களைப் பற்றிய மலத்தை ஒழித்து அவைகளுக்கு அழியாத இன்பத்தைக் கடவுள் கொடுத்துக் கொண்டு வருவதால், மலத்தின் செய்கைகளும் உயிரின் செய்கைகளும் சிறிது ஆராயும் பொழுது கடவுளின் செய்கைகளாய் முடிகின்றன. அவ் வாறு கடவுளின் அருட்செயல்களை எடுத்துப் புகல்வதும் கடவுளின் இயல்பை எடுத்துரைப்ப

தாகின்றது அல்லவா? ஆதலால் கடவுளின் இயல்பான நிலையை மேன்மேலும் விளக்கிக் காட்டுவதற்கு இலக்காகிய உலகுயிர்களின் இயல்பை எடுத்துச் சொல்லுவதும் கடவுள் வாழ்த்தாயிற் றென்க.

மேலும், இவ் வாழ்த்து அன்புடையவர்க ளால் உயர்த்துப் புகழ்வதாகும். ஒருவருக்கு உயர்வு எப்படி வரும்? அவருடைய உயர் வான செய்கைகளா லல்லவா வரும். ஆகவே, உலகத்தையும் உயிர்களையும் எடுத்து விளக் கித் தன் அருள்வெளியில் அவைகளை அசை வித்து அடக்கி ஆளுங் கடவுளின் உயர்ந்த நிலையை அன்பாளர்கள் எடுத்து வாழ்த் துரைப்பார்களானால், அவர்கள் அவருடைய அருட்பெருஞ் செயல்களையெல்லாம் எடுத்துப் புகழ்ந்து மகிழாமற் போவார்களோ?

இன்னும், ஒருவர் மனத்துக்கு இசையுமாறு எடுத்துச் சொல்லுவது வாழ்த்தாகும். வினை வாயில் அகப்பட்ட உயிர்களையெல்லாம் அதி லிருந்தும் மீட்டுத் தன்னிடம் சேர்த்துக் கொண்டு அவைகட்கு இன்ப வாழ்வு அளிப் பது ஒன்றே கடவுளுடைய திருக் குறிப்பாக

இருப்பதால், அவர் கொள்கையைத் தாமும் கைப்பற்றி அவரோடு ஒத்துத் தம்மால் ஆன வரையில் தம்மினுங் கீழ்ப்பட்ட உயிர்களுக்கு மேன்மை தேட எண்ணிக் "கடவுள் இயல்பு இது, அவர் செயல் இது, உலகத்தின் தன்மை இது, அதன் செயல் இது, அதில் அகப்பட்ட உங்கள் நிலை இவை, உங்கள் செயல் இவை; ஆகவே நீங்கள் செய்யவேண்டுவன இவை, செய்யவேண்டாதன இவை, அவற்றைச் செய்தால் இன்ன பயன் வரும், செய்யாவிட்டால் இன்ன துன்பங்கள் வரும், ஆதலால் செய்ய வேண்டியவைகளை உடனே திருத்தமாகச் செய்க" என்று இவ்வாறெல்லாம் விளக்கமாக எடுத்துரைப்பதே கடவுளின் திருக் குறிப்புக்கு இசையச் சொல்லும் வாழ்த்தாகும்.

தன் நன்மையில் மகிழ்ச்சியுடைய உயிர்க ளுக்காளுல் அவைகளின் நன்மையைக் குறித்து வாழ்த்துதல்வேண்டும். அங்ஙனமன்றிப் 'பிறர் நன்மையே தன் நன்மையாகக்கொள்ளுங் கடவு ளுக்குப் பிறர் நன்மையைத் தேடும் வாழ்த்தே 'கடவுள் வாழ்த்'தாகும். ஆகவேதான் முப் பொருள்களின் தன்மைகளும் மேற்காட்டிய



அறிவுரைகளும் இவ் வதிகாரத்தில் காணப்படு கின்றன.

இனிக் கடந்து உள்ளவர்க்குக் கடவுள் என்னும் பெயர் பொருந்துவதால், அங்ஙனமே, உலகுயிர்களின்மேல் உண்டான ஆசையைக் கடந்து உள்ளவராய், கடவுளோடு ஒன்ருகிப் பெருமை பாராட்டப்பட்டுக் கடவுள் என்றே பெயர்பெறும் அடியார்களுக்கும் இவ் வாழ்த்து உரியதாகும்.

கடவுள் என்னும் சொல் அடியார்க்கும் பெய ராய் வருவதைத் "தொன்முது கடவுட் பின் னர் மேய" *, "இப்போழ்து போழ்தென்றது வாய்ப்பக் கூறியவெக் கடவுள்" †, "கண்ணகி தாதை கடவுளர் கோலத்து" ‡ என்னுந் திரு

மொழிகளிற் காண்க.

இவ்வாறு ஒன்றுக்கொன்று இரண்டு பொருள்கள் பொருந்த ஆசிரியர் அமைத்த கருத்து நோக்கி உரை கூறுகின்ற முறையை

---

* மதுரைக் காஞ்சி, சக. † கலித்தொகை, கஉ.

‡ சிலப்பதிகாரம், உஎ, கஅ.



"இரட்டுற மொழியும் உத்தி" என்று இலக்கண நூலார் கூறுவர்.

பாயிரத்திலே நீத்தார் பெருமையைக் கூறும் 'நீத்தார்' என்னும் அதிகாரம் ஒன்று பின்னே இருத்தலின் அதுவே அடியார் வாழ்த்துக்கு உரியதாகுமல்லது நீங்கள் சொல்லுவதுபோல இஃது ஆகாதே என்றால், துறந்து இவ்வுலகத்தில் உலாவும் அடியார்களையே அவ் அதிகாரம் கூறிச் செல்வதாகும். இங்குக் 'கடவுள்' என்று பெயர்பெற்ற அடியார்களுக்கே வாழ்த்து உரை தருவதாலும், அப் பெயர் பெறும் அடியார்கள் கடவுளோடு இரண்டறப் பிணைந்து நீடு வாழ்பவ ராதலாலும், 'நீத்தார்' அதிகாரம் அடியார் வாழ்த்துக் கூறுவதாயின் முதனூலாசிரியர் கடவுளை வாழ்த்துவதற்குக் 'கடவுள் வாழ்த்'தென்று பெயரிட்டிருப்பது போல அதற்கும் 'நீத்தார் வாழ்த்து' என்று பெயரிட்டிருப்பரேயல்லது 'நீத்தார் பெருமை' என்று பெயரிட்டிரார் ஆதலாலும், அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை முதலாக அமைத்திருப்பதால் அஃங்ஙனங் கடவுள் வாழ்த்து நீத்தார் வாழ்த்து என்று வாழ்த்

தென்னுஞ் சொல்லை இரண்டுதரம் அமைத்திடுவதில் குற்றமில்லையாதலாலும், நூலுக்கு முதலில் முதலதிகாரத்தில் வாழ்த்துக் கூறவேண்டும் என்னும் ஆசிரியர் கருத்துக்கு இரண்டாம் அதிகாரத்தில் வேறொன்றைக் கூறி மூன்றாம் அதிகாரத்திற்போய் வாழ்த்துக் கூறினர் என்பது மாறுபடுவதாலும் அது பொருந்தாது. ஆகவே அடியாரையும் இவ்வதிகாரம் வாழ்த்தியதாயிற்றென்க.

## கடவுள்

### உலகுக்கெல்லாம் ஒரு பொருள் முதலே

இதன் பொருள் :—' உலகங்களுக்கெல்லாம் ஒரு கடவுள் தலைமையானவர் ' என்றவாறு.

இந்த அடி முழுமுதற் கடவுள் இருக்கிறார் என்று அவருண்மையைக் கூறுவதோடு, உலகம் உயிர் ஆக இரண்டின் உண்மைகளையும் உலகம் உயிர் கடவுள் ஆக மூன்று பொருள்களுக்கும் உள்ள தொடர்பையும், அத்தொடர்பால் சேரும் நிலைகளையும் செயல்களையும் பயன்களையும் விளக்குகின்றது.

முழுமுதற் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை மேற்குறித்த திரு உரையில் உள்ள 'உலகுக்குப் பொருள்' என்னும் இரண்டு சொற்களே ஒன்றுசேர்ந்து தெளிவிக்கின்றன. 'உலகம் உண்டாவதற்குத் துணை ஏது *வான கடவுள்' என்பது அவைகட்குப் பொருள்.

ஏது, முதலேது துணை ஏது என்று இருவகையாகும். அவைகளில் 'உலகு' என்பதோடு சேர்ந்து நிற்கும் 'கு' என்னும் நான்காம் வேற்றுமை உருபு துணையேதுப் பொருளில் வந்தது. 'பானைக்கு மண்' என்னும் பொழுது மண் முதல் ஏது; பானைக்குக் குயவன் என்னும்பொழுது குயவன் துணையேதுவாகிறான். ஏனென்றால், குயவனே பானையாகாமல் மண் பானையாவதற்கு அவன் துணையா யிருக்கிறானாதலால் என்க. அதுபோல 'உலகுக்குக் கடவுள்' என்னும் பொழுதும் உலகு துணை யேதுப் பொருளில் வருவதால் கடவுளே உலக மாகாமல் இன்னொன்று உலகமாக ஆவதற்குத் துணையாயிருந்தார் என்ப

* நிமித்த காரணம்.



தும், குயவன் மண்ணைக்கொண்டு பானை செய்வதுபோலக் கடவுள் வேறொரு பொருளைக் கொண்டு உலகத்தை உண்டாக்கினார் என்பதுந் தெளிவாயிற்று.

மண், புனல், அனல், கால், வான்* என்னும் ஐந்து பொருள்களாலும் ஆக்கப்பட்ட உலகம் அறிவில்லாதது ஆதலால் அதற்கு முதலேதுவா யிருப்பதும் அறிவில்லாத தாகவே இருக்கவேண்டும். எப்பொழுதும் அறிவுடையது அறிவில்லாதது ஆகாது; அறிவில்லாதது அறிவுடையது ஆகாது. உலகத்துக்குக் கடவுள் முதலேது என்போமானால் கடவுள் அறிவுடையவ ராதலால் அவர் அறிவில்லாத உலகமாவது செல்லாது. ஆகவே, கடவுளுக்கு வேறான ஓர் அறிவில்லாத பொருளே உலகத்தின் முதற்பொருளாக வேண்டும். அப்பொருளை 'மாயை' என்று சமயநூல்கள் சொல்

லும். உலகத்துக்கு மாயை முதலேது ஆகவே கடவுள் அதற்குத் துணையேது ஆவான். அறிவில்லாத மாயை தானாக உலகமாவது கூடாமையால் அறிவுள்ள கடவுளே துணையேதுவாகி உலகத்தை உண்டாக்கும். இவ் உண்மையை:

---

* பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்.



" காரண காரியங்கள்
முதல்துணை நிமித்தம்* கண்டாம்
பாரில்மண் திரிகை பண்ணும்
அவன்முதல் துணை நிமித்தம்
தேரில்மண் மாயை யாகத்
திரிகைதன் சத்தியாக
ஆரியன் குலாலனாய் நின்று
ஆக்குவன் அகில மெல்லாம் ! "

என்னுந் திருமொழியால் உணர்க.

உண்டாக்கிய கடவுளே அதனைக் காப்பாற்றவும் அழித்து மறைத்து அருளித் திரும்பவும் உண்டாக்கவும் பொறுப்பும் உரிமையும் உடையவனாதலால், அவன் இம் மூன்று தொழில்களையும் நான்முகன் முதலாக மூன்று தலைவர்

களை ஏற்படுத்தி, அவர்களின் வாயிலாகச் செய் பவனாகி இம் மூவர்க்கும் மேற்பட்ட முதற் கடவுளாகின்றான். உலகத்தின் மூன்று தொழி லுக்கும் உரிமையானவன் கடவுளென்பது:

---

* துணைக் காரணமும் நிமித்த காரணமும் கடவு ளிடத்துப் பிரித்தறியக் கூடாத அவ்வளவு நுட்பமா யிருப்பதால், இரண்டையும் ஒன்றாகக்கொண்டு துணைக்காரணமென்றே இங்கு அழைக்கப்படும்.

† சிவஞான சித்தியார், சுபக்-முதல்-௧௮.



"தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பேர் ஊழியும் நீக்கமும் நிலையும்
சூக்குமொடு அலத்துச் சூறை மாருதத்து
எரியது வளியில்
கொட்கப் பெயர்க்குங் குழகன்"*

என்பதாலும்; அவன் அம் மூன்று தொழில் களையும் மூன்று தலைவர்களின் வாயிலாகச் செய்யும் முதல்வன் என்பது,

" * * முழுதும் படைப்போன்
படைக்கும் பழையோன், படைத்தவை
காப்போன் காக்கும் கடவுள், காப்பவை

கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள்" *

என்பதாலும் விளங்கும்.

கதிர்விளைந்து தாள் பழுத்து உருச்சாய்ந்து கிடக்கும் வளவிய நெற்பயிரை ஆள்வைத்து அறுப்பவன் எவனோ அவனே மீண்டும் ஆள் வைத்து விளைக்கவும் விளைந்ததைக் காப்பாற்றவும் செய்வானாதலால் அழிக்குங் கடவுளே முத்தொழிலையுஞ் செய்யும் முதல்வனாவானென்று அவ் அழிக்குங் கடவுள் வாயிலாக உணரவைத்து,

* திருவாசகம், திருவண்டப் பகுதி.

" அவன் அவள் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர் "

என்பது சூத்திரம். என் நுதலிற்றோ எனின், சங்கார காரணனுயுள்ள முதலையே முதலாக உடைத்து இவ்வுலகம் என்பது உணர்த்துதல் நுதலிற்று* என்று மெய்கண்ட தேவ நாயனரும் ;

" அறுதியில் அரனே எல்லாம்
அழித்தலால் அவனே இன்னும்
பெறுதும் நாம் ஆக்க நோக்கம்
போதி கரணத் தாலே "†

என்று அருணந்தி சிவாச்சாரியாரும் சொல்லுவார்கள்.

மூவர்க்கும் மற்றுமுள்ள எல்லார்க்கும் எல்லாவற்றிற்கும் அவன் தலைவனென்று ஏற்படுவதால் ' முதற்கடவு ' ளென்றும், எதுவுங் குறைவில்லாமல் நிறைகடலாய் இருப்பவனே அங்ஙனம் தலைவனுவா னுதலால் ' முழுமுதற் கடவு ' ளென்றும், அறிவில்லாத உலகம் அசை

* சிவஞானபோதம்-முதற் சூத்திரம். † சிவஞான

வதிலிருந்து அதை அசைவிக்கும் ஒருவன் கட்டாயம் வேண்டுமென்று ஆராய்ந்து தெளிவதால் அக் கடவுள் உண்மையாக இருக்கிறான் என்றும் மேலடியில் காணப்படும் 'உலகுக்குப் பொருள்' என்னும் இரண்டு சொற்களும் தம் உரைகொண்டு அறிவுறுத்தின.

கடவுள் என்றும் உள்ளவர் என்பதை உலகுயிர்கள் என்றும் உள்ளவை என்று கூறுபிடத்துக் கூறப்படும்.

இனி, உலகுயிர்களின் உண்மையைப் புலப்படுத்துவது 'உலகு' என்னுஞ் சொல். உலகு என்பதால் உலகம் ஒன்று இருக்கிறதென்று அதன் உண்மை ஏற்பட்டது. மண் முதலாகிய ஐந்து பொருள்களாலான உயிரற்ற இவ்வுலகத்தைக் கடவுள் ஏன் படைத்தார்? உலகம் அறிவில்லாத தாதலால் அது தனக்குத்தானே ஏதும் அறிந்துகொண்டு நுகர முடியாது*. அல்லது தான் நுகருவதற்காகக் கடவுள் தானே படைத்துக்கொண்டார் என்றால் ஒரு குறைவுமில்லாமல் நிறைகடலாய் விளங்கும்

* அநுபவிக்கமுடியாது.

எம்பெருமானுக்கு நுகரவேண்டுவதும் ஒன்று இருக்குமோ? மேலும், "வேண்டுதல் வேண் வேண்டாமை இலான்"† என்றும், "பொறி வாயில் ஐந்து அவித்தான்"‡ என்றும், "பற் றற்ருன்"* என்றும் முதனூலாசிரியர் பல இடங்களிலும் எடுத்துக்காட்டி 'இறைவன் ஆசை இல்லாதவன்' என்பதை அங்கங்கு வலி யுறுத்தியிருப்பதால் அவன் ஆசையால் அது செய்தான் என்று சொல்லுவதாவது முடி யுமா? அதுவும் முடியாது. ஆதலால் கடவுள் தனக்காகவும் உலகத்தை உண்டாக்கிக் கொள்ளவில்லை என்பது பெறப்பட்டது. இவை களிலிருந்து கடவுள் உலகத்தை வேருெரு அறிவுள்ள பொருளின்பொருட்டுப் படைத் திருக்கிருர் என்பது விளங்கும். அப் பொருள் கள் தாம் உயிர்கள்.

"சொன்னவித் தொழில்க ளென்ன
காரணம் தோற்ற என்னின்

* * * *

அழிப்பு இளைப்பாற்றல் ஆக்கம்
அவரவர் கன்ம மெல்லாம்

† திருக்குறள் கடவுள் வாழ்த்து ௪,
‡ ,, ,, ,, ௫.
,, ,, ,, துறவு ௧௦.



கழித்திட நுகரச் செய்கை
காப்பது கன்ம ஒப்பில்
தெழித்திட மலங்க ளெல்லாம்
மறைப்பருள் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு
பார்த்திடில் அருளே எல்லாம்"*

என்பதுங் காண்க.

'உலகு' என்னுஞ் சொல்லால் உலகம் கடவுளால் செய்யப்பட்டது என்று தெரிந்துகொண்டு, அதை ஏன் செய்தார் என்று பின்பு ஆராய்ந்து, அஃது உயிர்களின் பொருட்டுச் செய்யப்பட்டது என்று தேறினமையால் உலகும் உயிரும் உண்மையானவை என்பது உறுதியாயிற்று.

இங்ஙனம் உய்த்துணர்தலின் வழியாக உலகும் உயிரும் உண்மையானவை என்று புலப்பட்டாலும், உலகு என்னுஞ் சொல்லில் அவைகளைப்பற்றிய குறிப்பு ஏதேனும் உண்டோ என்றால், உண்டென்று கொள்க.

உலகம் என்றது உயிர்களையும் உட்கொண்டது. மண்ணும் நீரும் நெருப்பும் வளி வெளி

* சிவஞான சித்தியார், சுபக்-முதல், ௧.௪, ௧.௫.



களும் சேர்ந்து நிலவுருண்டையாயிருக்கிறது. இவ்வுருண்டையின் உள்ளும் புறம்பாக எண்ணில்லாத உயிர்கள் வாழ்ந்துகொண்டிருக்கின்றன. நம்மைப்போல உடலோடு கூடி இருந்தால் நிலத்திற் படிந்தும், அவ் உடலில்லாத பொழுது வெளியில் வீசிவருங் காற்றில் உலாவியும், எல்லா உயிர்களும் உயிர் வாழ்கின்றன. ஆகையால், உயிர்களெல்லாம் மண் முதலான ஐந்து பொருள்களின் இடையிலே கிடப்பனவே. அல்லாமல், அவை தனித்துக் கிடப்பன அல்ல; அப்படிக் கிடப்பதிற் பயனும் இல்லை. எனவே, மண் முதலான ஐந்து

பொருள்களோடு அளவிறந்த உயிர்களும் சேர்ந்து இருப்பதே உலகமெனப் பெயர் பெறும். இது,

“ நிலம்நீர் நெருப்பு உயிர்* நீள்
விசும்பு நிலாப் பகலோன்
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப்
புணர்ந்து நின்றான் ”

என்று அருளிய மாணிக்கவாசகர், அவ் எட்டுப் பொருளும் சேர்ந்ததே ‘உலகம்’ எனப்

* காற்று.



படும் என்பதுதோன்ற அதன் தொடர்பாகவே, “உலகுஏழெனத் திசைபத்தெனத் தான்ஒருவனுமே பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ”† என்று அருளியிருக்கின்றமையால் விளங்கும்.

உயிர்களே இல்லாமல் ஒரு நொடிப்பொழுதேனும் மண் முதலான அந்த ஐம்பொருட் கூட்டுமட்டும் இருக்குமானால், அப்பொழுது அப் பொருட் கூட்டுக்கு உலகமெனும் பெயர்

பொருந்தும். அப்படி வெறும் பொருட்கூட்டாக என்றும் இல்லாமையால் அதற்கு அப்பெயரும் என்றும் இல்லையென்க.

இவ் ஐம்பொருட் கூட்டும் உயிர்களும் ஒன்றையொன்று பிரித்தறியக்கூடாத நிலையில் இரண்டறப் புணர்ந்து பொதுவாக 'உலகு' என்று பெயர் படைத்திருக்கின்றன. ஒருகால் அவ் ஐம்பொருட் கூட்டுக்கும் மற்றொருகால் அதில் வாழும் உயிர்களுக்கும் பெயராய் வரும். "உலகத்தோடு ஒட்ட ஒழுகல்"[1], "உலகம் உவப்ப"[2], "உலகம் என்பது

---

† திருவாசகம், திருத்தோணோக்கம் ௫.
1 திருக்குறள், ஒழுக்கமுடைமை, ௪0.
2 திருமுருகாற்றுப்படை, க. நச்-உரை.



உயர்ந்தோர் மாட்டே"[3], "கண்ணாய் உலகுக்கு நின்றாய்"[4] "உலகெலாம் உணர்ந்து"[5] என்று நூலாசிரியர்களும், "உலகம் என்றது ஈண்டு உயிர்கள்மேல் நின்றது"[6] என்று உரையாசிரியர்களும் ஒருமிக்கச் சொல்லுவ

தால், உலகம் உயிர்கட்குப் பெயராய் வருவது விளங்கும். இந்தத் திருமொழிகளாலும் "ஊர் பரந்த உலகு" 7 என்பதுபோன்ற அருண் மொழிகளாலும் 'உலகு' ஐம்பொருட் கூட்டுக்குப் பெயராய் வருவதும் அறியலாம். என்றாலும், ஐம்பொருட் கூட்டுக்குமட்டும் ஒரு தனிப்பெயர் வைத்து வழங்கவேண்டியிருப்பதால், ஆன்றோர்கள் அதற்கே அதைச் சிறப்புப் பெயராக நூல் வழக்கிலும் உலக வழக்கிலும் வைத்து ஓதுவர். ஓதி, உயிருக்கும் அது பழங் காலத்திலிருந்தே ஆகி வருவதால் அவ்வுயிருக்குப் பெயராக வரும்பொழுது அதை ஆகுபெய ரென்பர்.

---

3 தொல்காப்பியம். 4 அப்பர் - திருக்கயிலாயம் - கக. 5 பெரிய புராணம் - பாயிரம். 6 திருக்குறள் கடவுள் வாழ்த்து - பரிமே - உரை. 7 சம்பந்தர் - திருப்பிரமபுரம் - க.

இவ்வகையாக 'உலகு' என்பதிலிருந்து வகுத்து எடுத்துக்கொண்ட ஐம்பொருட் கூட்டென்னும் மாயையும் உயிரும் எப்பொழுதும் அழியாமல் இருப்பவைகளே என்பது 'ஒரு பொருள் முதலே' என்பதாற் றெரிகின்றது.

தலைவன் என்று ஒருவன் எந்த நாள்வரையிற் சொல்லப்படுகின்றானோ அந்த நாள் வரைக்கும் அவனுக்குக் கீழாக அடங்கிய வேறு சிலரும் இருக்கிறார்கள் என்பது உண்மை. இஃது எல்லார்க்கும் தெரிந்ததொன்று. அது போலவே கடவுள் முதன்மையானவன் என்று கூறும்பொழுது அவன் என்று வரையில் முதன்மையானவன் என்று அழைக்கப்படுகிறானோ அன்றுவரைக்கும் அவனுக்கு வேறாய்
அவனுக்கு அடங்கிய உயிரும் அழியாமல் இருக்குமென்பது ஏற்படுகின்றது அல்லவா? உயிரிருக்கிறவரைக்கும் அவ் உயிரின்பொருட்டு உலகமாகக் கூடிய மாயை மலமும் இருக்கும் அல்லவா? இவைகொண்டு கடவுள் உள்ள வரைக்கும் உயிரும் மலமும் உண்டு என்று

உறுதியாய்க் கூறிவிடலாம்.

கடவுள் எப்பொழுதும் இருப்பாராகையால் உலகுயிர்களும் எப்பொழுதும் இருக்குமென்க.



ஒரு பொருளைப்பற்றிக் கூறுபவர்கள் அதற்கு வேண்டுவனவாகிய அதன் வடிவ இலக்கணம், தன்மை இலக்கணம், கால இலக்கணம் ஆக மூன்றையும் கூறவேண்டுவது முறையும் மரபுமாகும். கடவுளையும், அதை அடுத்து உயிரையும், உலகத்தையும் எடுத்துச்சொல்லும் இம் முதலடி, கடவுள் முதலாக மூன்று பொருள்களினுடைய வடிவம் தன்மை என்னும் இரண்டின் இலக்கணங்களை மட்டும் நிறுத்துச் சொல்லி, அவற்றின் கால இலக்கணத்தைச் சிறிதுங் குறிப்பிடாமல் அப்படியே விட்டுவிட்டது. அவைகளின் வடிவத்தன்மை இலக்கணங்கள் இன்னவை என்று பின்புங் காட்டப்படும்.

இப்படி விட்டதுகொண்டு, அவற்றின் கால இலக்கணத்தை இவ்வடி கூறவே இல்லை என்று கொள்ளுவது கூடாது. இன்னகாலத்தில் தோன்றி, இன்னகாலத்தில் அழியும் என்று சொல்ல முடியாதபடி அவ்வளவு பழையன வாயும் புதியனவாயும் அவைகள் எப்பொழுதும் உள்ளன என்பதைக்காட்டவே அவ்வாறு ஏதும் உரையாமல் விட்டுவிட்டதென்க.

கடவுள் 117

இங்ஙனம் பாட்டில் சொல்லப்பட்ட பொருளோடு சேர்த்துச் சொல்லக்கூடிய பொருளைச் சொல்லாமல் விட்டிருந்தால் அதனை உரை கூறும்பொழுது எடுத்துச் சொல்லிவிடும் முறையை,

> 'மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின்
> மொழியா ததனை முட்டின்றி முடித்தல்'

என்னும் உத்தி என்பர்.

> "பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருளென்று
> பல்லாண்டு கூறுதுமே"

என்பது திருப்பல்லாண்டு[1]

அப்படியானால், அவற்றின் வடிவம் தன்மை என்னும் இரண்டிலக்கணங்களை மட்டும் வருத்

துச் செல்லுதல் இயலுவதோ என்றால், நல்லது, அம் மூன்றினுடைய வடிவமும் தன்மையும் இப்படிப்படவை என்று தெளிவாக விளக்குவது அரிதேயாலும் இவற்றினுங் கால இலக்கணம் என்பது நுணுகி நுணுகி நோக்குவார்க்கும் நுணுகி நுணுகி நுட்பங் காட்டுவதாகும்.

---

1 திருப்பல்லாண்டு-உ.



நம்முடைய உள்ளத் தன்மையையும், வடிவத்தையும் நாம் ஒருவாறு தெளிந்துகொள்ளலாம். ஆனால், நாம் எவ்வளவுகாலம் இங்கு இருப்போம் என்பதைத் தெரிந்துகொள்ளுவது எவ்வளவு அரிதாக இருக்கிறது.

மேலும், புதிதாக நாம் ஒருவனைக் கண்டால் அவனுடைய உருவத்தையும் பண்பையும்[2] அப்பொழுதே ஒருவாறு துணிந்துகொள்ள

லாம். ஆனால் அவன் எவ்வளவு காலம்வரைக்கும் பிழைத்திருப்பான் என்று அவன் காலத்தை அறிய வேண்டுமானால், அவன் இறந்துபோமளவும் நாம் பிழைத்துக் காத்திருந்து, அவன் இறப்பதைக் கண்டு தானே அதன் பிறகு துணியவேண்டி யிருக்கின்றது!

இன்னும், ஒருவன் வடிவத்தைக் கண்டு அவன் தன்மையை உய்த்துணரலாம். தன்மையைக் கண்டு வடிவத்தையும் ஆராய்வது கூடும். வடிவம் ஒன்றையே அல்லாமல் வடிவம் தன்மை ஆக இரண்டையுமே கொண்டு அவன் காலத்தை ஆராய்ந்து அறிவது எளிதில் முடிவதா!

---

2 குணத்தையும்



மாயை உலகமாகியும் உயிர் உடம்போடு கூடியும் நிற்பதால், அவற்றின் வடிவத்தையும் தன்மையையும் கூடுமான வரையில் அறிந்து கொள்ளுவதோடுகூட அன்பர்பொருட்டு அருளுருவங்கொண்டு வெளிப்படுங் கடவுளை அப்பொழுது காணும் பெரியோர்கள் அதன் திருவுருவையும் அருளியல்பையும் உணர்ந்து

கொள்ளுவார்கள். இம் மூன்றும் உருமாறி மறைந்துவிட்டாலும், அவைகளுடைய அரு உருவத்தை நீர் கொண்டும் வளி கொண்டும் வெளி கொண்டும் ஒருவாறு உய்த்து உணருவார்கள். ஆனால், அவைகளின் காலம் சிறிதும் உணரக்கூடியதன்றாம். வடிவம் தன்மையையும், தன்மை வடிவத்தையும் ஒட்டிக்கொண்டு வெளிப்படுவன. ஆனால் காலமோ என்றால், எவற்றையும் பற்றாமலும் ஒரு வரம்புக்கு உட்படாமலும் நீளச் செல்லுவதாகும்.

இவ்வாறெல்லாம் காலமென்பது நுட்பம் மிகுந்து நீளுவது கருதியே அருளிருந்தாற் காணலாம் என்னுங் கருத்துத் தோன்ற,



"அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இவ்வுருவன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொ
[ணாதே"[3]

என்று இறைவனுக்கு எல்லாங் குறித்தருளிய நாவுக்கு அரசுகளும் அதில் காலத்தைமட்டும் குறியாமல் விட்டுவிட்டார்கள். இங்ஙனம் அரசுகளே யல்லாமல் ஏனைய சமயாசாரியரும் பிற

ருங்கூட பொருள்களின் வடிவம் தன்மையும் பற்றி விரிவாக விளக்கிச் சொல்லுவதுபோல அவற்றின் காலத்தைப்பற்றி அவ்வளவு விரித்து விளக்குவதில்லை.

இக்காலத்திற் கூட, வடிவத் தன்மை யாராய்ச்சிகள் செய்வாரைவிட மிகுந்த அறிவு நுட்பம் வாய்ந்தவர்களே கால ஆராய்ச்சியை மேற்கொள்ளுகிறார்களாதலால் அதுவே இதற்குத் தக்கதொரு சான்றாம்.

ஆதலால் இவ்வடி முதல்நூற் குறளைப் போலவே உலகுயிர்களின் காலத்தை 'முதல்' என்னும் சொல்லாற்றலால் இறைவனோடு

3 அப்பர் தேவாரம், பொது, வினாவிடைத் திருத்தாண்டகம்.



சாரவைத்து விளக்கி, இறைவன் காலத்தை எதுவுங் கூறாமல் விட்டுத் தெளிவிக்கின்றது.

இதனால், வடிவத்தையும் தன்மையையும் விடக் காலம் நுண்ணிதானது என்றும், ஆகவே, கடவுள் உயிர் உலகம் என்னும் மூன்றும் ஒரு வரம்புக்கு உட்படுத்துவது முடியாது என்றும், அப்படி உட்படுமானால் இவ்வளவுகாலம் வரையில் கடவுள் முதல் அம்மூன்றும் இருக்கும் என்று அக்கால வரம்பை இவ்வடி குறித்திருக்கும் என்றும், அஃது அதுங் குறிக்காமையால் அம் முப்பொருள்களின் காலம் ஒரு வரம்புட்படாது போக அவை எப்பொழுதும் உள்ளவைகளாம் என்றும் பெறுகின்றேம.

இவ்வாறு நுட்பமான கருத்தைக் குறிக்காமலே ஆசிரியர்கள் நூல செய்தலையும், அங்ஙனம் குறித்திடாது கொண்டே அங்குப் பொருந்தும் அக்கருத்தை எடுத்துக் காட்டி உரையாசிரியர்கள் உரைகூறு முறையையும்,

"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்"

என்னுந் தோல்காப்பிய உரைக்கு "இங்ஙனம் மெய்க்கண் அகரங் கலந்து நிற்குமாறு கூறினாற்போலப் பதினோருயிர்கண்ணும் அகரங்

கலந்து நிற்குமென்பது ஆசிரியர் கூறுமாயி னார், அந்நிலைமை தமக்கே புலப்படுதலானும், பிறர்க்கு இவ்வாறு உணர்த்துதல் அரிதாக லானும என்று உணர்க" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைகூறி, அச்சூத்திரத் தில குறிக்கப்படாத 'உயிரெழுத்துக்களோ டும அகரம் கலக்கு'மென்னும் புதுக் கருத் தை அதன் நுட்பங் கருதிக் கூறுதது கொண் டே தெளிவித்தமையால் கொள்ளப்படும்.[1]

இவ்வளவும் ஆராய்ந்தது கொண்டு உலகும் உயிரும் உண்மையாக எப்பொழுதும் இருப் பவைகள் என்பது தெளிவாயிற்று. அவ்வா

ருனுல்,

"நானும் அழிந்து தனமும் அழிந்து நீடு
ஊனும் அழிந்து உயிரும் அழிந்து உடன்
வானும் அழிந்து மனமும் அழிந்தபின்
நானும் அழிந்தமை நான் அறியேனே"[2]

என்று திருமூலமுனிவர் கடைசியில் எல்லாம் அழிந்து போகும் என்று அருளியிருக்கின்றார்களே, அதன் கருத்து என்னவோ என்றால், கடவுளுடைய திருவருளை இவ்வுலகத்திலேயே

1 தொல்காப்பியம், எழுத்து, மொழிமரபு, கரு.
2 திருமந்திரம், உகூகுச.



முழுதும் அடைந்து நுகர்தரு பெரியாராய்[1] விளங்கிய அம்முனிவரே, அதை அடுத்து,

"இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்
பொருளில் பொருளாய்ப் பொருந்த உள்ளாகி
அருளால் அழித்திடும் அத்தன் அடிக்கே
உருளாத நன்மனம் உற்று நின்றேனே"[2]

என்று அருளிச்செய்து உலகும் உயிரும் உருவம் மட்டும் மாறித் தம்முதல் என்றும் அழி

யாத முதற்பொருளாய் இறைவனுடைய திரு வருள் வெளியில் எதொரு செயலும் அற்றுக் கிடக்கும் என்று அவைகளுடைய உண்மை யான நிலையை உரைத்திடுவதால், முன்பாட்டில் அழிந்துபோயிற்று என்றதற்கு உலகுயிர்ப் பொருள்க ளெல்லாம் முதலே இல்லாமல் வெறும் பாழாய் அழிந்துபோயின என்பது கருத்தாகாது. நம்முடைய கண்களுக்கு உருவமாய்த் தோன்றும் எல்லாப் பொருள் களும் அவ் உருவங் குலைந்து சிறு சிறு பொடி களாயும், பின்னும் மிக மிக நுண்ணிய

1 அநுபூதிமானும்   2 திருமந்திரம், ௲௧௫௨



அணுக்களாயும் மாறி, நம் கண் பார்வைக்கு மறைந்து போகும் அவ்வளவே அல்லாமல், அப்பொருள்கள் எப்பொழுதும் தம் முத லழிந்து போவதில்லை.

இங்ஙனமே இக்காலத்து இயற்கைப் பொருள் நூலாருங் கூறுவார்.

பொருள்களெனப்படுவனவெல்லாம் என்றும் தம்முதலழியாமல் மெய்யாக இருப்பதனால்தான் 'பொருள்' என்னுஞ் சொல 'மெய்' என்பதற்கு ஒரு பெயராயிறறு. "பொய்யுரையே யன்று பொருளுரை"[1] என்பதையும், அதில் வரும் "பொருளுரை" என்பதற்கு "மெய்யுரை" என்று பொருள் கண்ட அரும்பத உரையாசிரியர் உரையையும், "பொய்யில் புலவன் பொருளுரை"[2] என்பதையும் காண்க.

"தெய்வச் சிதம்பர தேவா!
உன் சித்தம் திரும்பி விட்டால்
பொய்வைத்த சொப்பனமாம்
மன்னர் வாழ்வும் புவியும் எஙகே;
மெய்வைத்த செல்வமெங்கே,
மண்டலீகர்தம் மேடைஎங்கே,
கைவைத்த நாடகசாலை எங்கே,
இது கண் மயக்கே"[3]

---

1 சிலப்பதிகாரம், கூ, கஅ. 2 மணிமேகலை உஉ, கக.
3 பட்டினத்தார் பாடல்.

என்பனவாக வரும் ஆன்றோர் திருவாக்குகளுக்கெல்லாம் இதுவே கருத்தாகக் கொள்க.

மூன்றுவதாகக் கடவுள், உயிர், உலகு என்னும் மூன்று பொருள்களுக்கும் இன்ன தொடர்பு உள்ளது என்றும் இவ்வடி காட்டுகின்றது. இதற்கு ஏதுவாயிருப்பன 'உலகு' 'பொருள்' என்னும் இரண்டு சொற்கள். 'உலகு' என்பது மண் நீர் தீ வளி வெளிகளாகிய ஐம்பொருட் கூட்டுக்கும், அதில் உடலோடு கூடிச் சிலகாலம் இருந்து உயிர் வாழும் உயிர்களுக்கும் பெயரென்று முன்பு சொன்னேம். அறிவில்லாத ஐம்பொருட் கூட்டும் அறிவுள்ள உயிர்களும் வேறு வேறு தன்மைகள் உள்ள வேறு வேறு பொருள்களாக இருந்தும் அவை இரண்டும் ஒன்றுய் உராய்ந்து நின்றே எப்பொழுதும் விளங்குவதனல் அவ்வாறு அவ்விரண்டுக்கும் 'உலகு' என்பது பொதுப் பெயராயிற்றென்றும், அவ்வாறுனும் ஐம்பொருட் கூட்டுக்கே அதைச் சிறப்புப் பெயராக வைத்து வழங்குவரென்றும், அதன் 1 ஏதுவையுங்கூட அவ்விடத்திலேயே கூறி

---

1 காரணத்தையும்.

ளும். உலகத்தோடு அதாவது மலத்தோடு சேர்ந்து அதனுடைய தன்மையைத் தன்னு டைய தன்மையாக ஏற்றுக்கொண்டு அந்த வண்ணமாகவே உயிர் திரிந்து போவதால், மலமாகிய ஐம்பொருட் கூட்டுக்குச் சிறப்புப் பெயராய் வந்த 'உலகு' என்பது உயிருக்கும் மாகியது பொருந்துவதே.

எந்த பொருளைச் சார்கின்றதோ அதன் வண்ணமாய் உயிர் திரிபடையும் என்னும் உயிரினியல்பை முதல் நூலாசிரியரே,

" நிலத்தியல்பால் நீர் திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு "[1]

" சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்

சார்தரா சார்தரு நோய்"

என்று விளக்குவார்கள். இதை இன்னுந் தெரியும்படியாக நம் தாயுமானச் செல்வனார்,

"யாதொன்று பற்றின் அதன் இயல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து"[3]

என்று தெளிவாகத் தெளித்துரைப்பார்கள்.

'உலகு' என்றதனால், மலமும் உயிரும் வேறு வேறான இரண்டு பொருள்களா யிருந்தாலும்

---

1 திருக்குறள், சிற்றினஞ் சேராமை ௨, 2 திருக்குறள் மெய்யுணர்தல் ௧, 3 தாயுமானர் பாடல்.



கலப்பால் ஒன்றுபோல், இவ்வாறு ஒன்றை யொன்று விடாமல் பற்றிக்கொண்டிருக்கின் றன என்று எற்படுவதால் அவ் 'உலகு' என்பது உயிருக்கும் மலத்துக்கும் இவ்வகையான தொடர்பு இருக்கின்ற தென்பதைக் காட்டுகின்ற தன்றோ? ஒன்றுபோல் கலந்திருப்பதைக் கொண்டு வேறு வேறான மலத்தையும் உயிரையும் ஒன்றுதானென்று சொல்லுவதும் முடியாது. அல்லது பொருள் வேறாக இருப்பதைக்கொண்டு ஒன்றே என்னும்படி

கலந்திருக்கும் அம்மலத்தையும் உயிரையும் இரண்டு என்று பிரித்துக் கூறுவதும் இயலாது. இங்ஙனம் இரண்டு வகையாகவும் கூற முடியாதபடி, அதாவது இரண்டற்ற நிலையில் புணர்ந்திருக்கும் இப் புணர்ச்சியையே வடமொழியில்[1] "அத்துவிதம்" என்று சொல்லுவார்கள்.

உலகத்தில் உலாவும் உயிர்களெல்லாம் அங்ஙனம் பிரித்துக் கூற முடியாதபடி ஒன்றேயெனக் கலந்திருக்கவில்லையே: உலகு கிடந்த

1 சம்ஸ்க்ருதத்தில்.



வண்ணமாய்த் தனித்துக்கிடக்கின்றது. உயிர்கள் அதில் ஓடியும் விளையாடியும் இயங்கித் தம் வேறுபாடு தெரிவிக்கின்றனவே என்றால், அற்றன்று; உலகும் உடலும் ஒன்று; அதில் இருக்கும் உயிர் மட்டும் வேறு. உலகும் மண் முதலான ஐம்பொருட் கூட்டால் ஆனது; உடம்பும் அவ் ஐம்பொருட் கூட்டால் ஆனதே. உலகத்தை 'அண்ட சரீரம்' என்றும், உடம்

பைப் 'பிண்ட சரீரம்' என்றும் வடமொழி யாளர் கூறுவர். அண்ட சரீரத்தின் அமைப்புகள் எல்லாம் பிண்ட சரீரத்திலும் அப்படியே அமைந்திருக்கும். இங்ஙனம் உடம்பும் உலகும் ஒன்றே என்னும் இதனை உரைவகையால் விரிக்காமல் ஆன்றோர் திருவாக்குகளால் உறுத்திவிட்டு மேற்செல்லுவோம்.

"திருவளர் ஆரூர் மூலம் திருவானைக் காவே நாபி
மருவளர் பொழில்சூழ் அண்ணாமலைமணிபூரம் சீவிர்
இருவருங் கண்ட மன்றம் இதயமாக் திருக்காளத்தி
பொருவருங் கண்டமாகும் புருவமத் தியமே காசி"

என்றும்;

"இடைபிங் கலை இமவானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுமுனை



கடவுந் திலைவனங் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமமே"

என்றும் ஆன்றோர் அருளி யிருப்பதைக் காண்க.

கடவுள் மாயை மலத்திலிருந்து உலகத்தை உண்டாக்கியது போலவே அதிலிருந்தே உடம்பையும் உண்டாக்கிறை ஞதலின், "மண்ணிலே பிறந்து மண்ணுவதற்கு ஒருப்படுகின்றேனே" 1 "வாழ்வாவது மாயம் இது மண்ணுவது திண்ணம்" 2 "முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு பிடிசாம்பராய் வெந்து" 3

"எரிஎனக் கென்னும் புழுவோ
எனக் கென்னும் இந்தமண்ணும்
சரிஎனக் கென்னும் பருந்தோ
எனக்கென்னும் தான் புசிக்க
நரிஎனக் கென்னும் புன்நாய்
எனக்கென்னும் இந்நா றுடலைப்
பிரிய முடன் வளர்த்தேன்
இதனு லென்ன பேறெனக்கே" 4

---

1 திருவாசகம், அதிசயப் பத்து, ஈ பாடல்கள் 2 கம்பிகன் தேவாரம், திருக்கேதாரத் திருப்பதிகம். 3 பட்டினத்தார்

என்று இவ்வாறெல்லாமும் அருளி, உடம்பி லிருந்து உயிரை வேருகப் பிரித்துக்கொண்டு அவ் உடம்பை உலகத்தோடு சேர்த்து அஃது அழிந்து மண் முதலான ஐம்பொருட் கூட் டாய் ஒழிந்து போவதைத் தெளிவாகச் சான் ேறோர்கள் விளக்கி இருக்கின்றார்கள். இவை களைக் கொண்டு மாயை மலமாகிய உடம்பும் உலகும் ஒரு பொருளே என்பதைத் தெரிந்து கொள்ளுவதால் உடம்போடு உயிர் கலந்திருக் கும் முறையே மலத்தோடு உயிர் கலந்திருக் கும் முறையாம் என்பது சொல்லாமலே விளங்கு மன்றோ?

இனி, உடம்போடு உயிர் கலந்திருக்கும் முறை எதுவென்று பார்ப்போம். முதல் நூலா சிரியர், "குடம்பை தனித் தொழியப் புட் பறந் தற்றே, உடம்போடு உயிரிடை நட்பு" 1 என்றும், "உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன மடந்தையொ டெம்மிடை நட்பு" 2 என்றும் உடலுயிர்த் தொடர்பை நன்கு அருளி யிருக்கின்றார்கள். 'கூட்டிலே பறவை

---

1 திருக்குறள், நிலையாமை, அ. 2 திருக்குறள்-காதற்

இருப்பது போலவும், கொடுப்பவர்களும் அடுப்பவர்களும் இல்லாமல் முன் வினைத் தொடர்பால் திடீரென்று பெண்ணொருத்தியைக் கண்டு காதலித்துக் கூடிய ஒருவன் அம்மடந்தையிடம் எவ்வாறு நெஞ்சு தோய்ந்திருப்பானே அதுபோலவும் உடம்பிலே உயிர் பொருந்தி யிருக்கிறது' என்று அத்திருக்குறள்களில் நாயனார் விளக்கி யிருக்கின்றார்கள்.

மரத்தில் தொங்கும் கூட்டிலே குருவி இருக்கும்பொழுது வெளியிலிருந்து காண்பவன் அதைக் கூடு என்று கூறுவானே யல்லாமல் 'கூடுங் குருவியும்' என்று கூறுவா னல்லன். கூடும், அதற்கு வேறாகக் குருவியும் ஆக இரண்டிருப்ப, அவன் 'கூடு' என்று ஒன்றே யாய்க் கூறுவது பொருந்தவில்லை. அல்லது கூடுங் குருவியும் என்றானால் கூடு ஒன்றே தெரிவதாயிருப்பக் கண்ணுக்குத் தெரியாத குருவியையுஞ் சேர்த்துக்கொண்டு ஒன்றுபோ லிருப்பதை வேறு வேறாகப் பிரித்து இரண்டு என்று சொல்லுவதும் பொருந்துவதில்லை.

“குடம்பை” என்பதற்கு ‘முட்டை’ என்று பொருள் கொண்டாலும், முட்டையினுள்



கருவளர்ந்து உயிர் பெற்றிருக்குங் குஞ்சுக்கும் அம் முட்டைக்கும் இடையில் இவ் இரண்டற்ற புணர்ப்பு வெளிப்படுவது காண்க. இதனை ஆசிரியர் பரிமேலழகியார் கூறிய அக் குறளுரையோடு ஒத்துக் காண்க.

இங்ஙனமே, மடந்தையும் அவளிடம் நெஞ்சு தோய்ந்த ஆடவனும் வேறு வேறான இரண்டு பேராய் இருந்தாலும் அவ்விருவருங் கருத்தில் ஒருவராய் இருக்கிறார்கள். கருத்து ஒருமித்திருப்பதைக் கண்டு அவ்விருவரையும் ஒருவர் என்று உலகத்தவர் கூறுவர். ஆனால் அவர் ஒருவரோ? - அல்லர், இரண்டு பேர். மற்று, இரண்டு பேர் என்றால், ஒருவர் உயிரில் ஒருவராக உருவித் தோய்ந்து இன்பூறும் ஒரு கருத்தினராகிய அவர்களை இருவர் என்று வேறுபாடு தெரித்தல்தான் முறையாகுமோ? அது

வும் முறையன்று.

இவைகளைப் போலவே உடம்பில் உயிர் நின்றிருக்கும என்று விளக்கியருளிய செந்நாப் புலவரின் உவமைத் திறத்தை என்னென்பேம்! உயிரும் உடம்பும் ஒன்றுதான் என்பதும் முடியாது; அவற்றை வேறு வேறாகப் பிரித்து



இரண்டுதான் என்பதும் கூடாது. இப்படி இரண்டுமற்ற நிலையில் கலந்திருப்பதே உடலுயிர்த் தொடர்பாம். உயிர் உடம்புள் மறைந்து உடம்பே என்று சொல்லும்படி கலந்து இருப்பதை, உடம்பே மலமானதால், உயிர்கள் மறைந்து மலமே என்னும்படி கலந்து கிடக்கின்றன என்பர் இவ்வளவுங் கூறியதால் 'உலகு' என்னுஞ் சொல்லிலிருந்து மலத்துக்கும் உயிர்க்கும் உள்ள தொடர்பு 'இரண்டற்ற புணர்ப்பு' என்பது வெளிப்பட்டது காண்க.

இங்ஙனம் ஒன்றாகவும் அல்லாமல், இரண்டாகவும் அல்லாமல, உயிர் உடம்போடு கூடியிருப்பதுபோலவே, இறைவனும், உயிர்களோடும் மலமாகிய உலகங்களோடும பிரிவறக் கலந்திருப்பான். இறைவன் உலகுயிர்களோடு கலந்து முதன்மையாகும் முறையை விளக்குவதற்கு ‘அ’ என்னும் எழுத்து மற்ற எழுத்துக்களோடு கலந்து முதன்மையாகும் முறையை எடுத்து முதனூலாசிரியர் உவமானமாகக் காட்டுவார்.

‘அ’ என்னும் எழுத்து ஒருவன் தன் வாயைத் திறந்த அளவிலேயே எதொரு விகார



மும் இல்லாமல், இயல்பாய்ப் பிறந்து, தன்னை ஒழிந்த மற்ற உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் பிறப்பதற்குத் துணையேதுவா யிருப்பதோடு, அவைகளில் தன்னுரு மறைத்து அவற்றின் வண்ணமாய்க் கலந்து அவைகளை வழங்கச் செய்தும், அவைகளுக்கு வேறாகத் தான் தனித்து வழங்கியும், மற்ற

எழுத்துக்கள் இல்லையாய் அழிந்த காலத்தும் 1 தான் அழியாமல் அவற்றின் முதலோசை யாய் நின்று எல்லா மொழிகளிலும் தலைமை காட்டியும் விளங்குவது. 'அ' வ்வெழுத்தின் இயல்புகளை யெல்லாம்,

"அஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்"
(பிறப்பியல், ௩)

"சார்ந்துவரின் அல்லது தமக்கு இயல்பு இலவென"
( ,, ௧௧)

"தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்
தத்தம் சார்பின் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியில் தம்இயல்பு இயலும்"
(பிறப்பியல் ௧௨)

---

1 அழிந்த காலத்தும் அழியாமல் இருப்பதென்பது மற்ற எழுத்துக்களைச் சொல்லிவிட்ட பின்பும் அகரம் மட்டும் நுண்ணிய ஒலியுடன் எப்பொழுதும் உள்ளே ஊசலாடிக்கொண்டிருப்பது.



"புள்ளி இல்லா எல்லா மெய்யும்
உருஉருவாகி அகரமோடு உயிர்த்தலும்"
(நூன்மரபு, ௧௭)

"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்"
(மொழிமரபு, ௧௩)

"மெய்யொடு இயையினும் உயிரியல் திரியா"
(நூன்மரபு, ௧௦)

என்னுந் தொல்காப்பியர் சூத்திரங்களாலும், "அகரமுதல எழுத்தெல்லாம்" (கடவுள் வாழ்த்து—௧) என்னுந் திருக்குறளாலும், அவற்றின் உரைகளாலும் அறியலாம்.

இறைவனும் அதனோடு ஒப்பவே எப்பொழுதும் இயல்பாய் நின்று, உலகமும் உயிரும் உருக்கொள்வதற்குத் துணையேயதுவாய் இருப்பதோடு, அவைகளில் தன்னுரு மறைத்து அவைகளின் வண்ணமாய்க் கலந்து அவைகளை அசைவித்தும், அவைகளுக்கு வேறாகத்தான் தனித்து விளங்கியும், உலகு உயிர்களெல்லாம் அழிந்த காலத்தும் தான் அழியாமல் எல்லா உலகங்களுக்கும் எல்லா உயிர்களுக்கும் தலைமை காட்டியும் நிற்பது கண்டு கொள்க.



முதல்நூல், அகரத்தை இறைவனிலைக்கு உவமை காட்டியதுபோல இந்நூல் ஏதொரு உவமையுங் காட்டவில்லை போலும் என்றால்,

அறியாது கூறினாய்; இதுவும் ஓர் உவமையை உட்கொண்டிருக்கிறது.

"உலகு" என்னுஞ் சொல் 'உடலுயிர்த் தொடர்பை' விளக்குகின்றதென்று முன்பு கூறினோம். அதுவே இறைவனுக்கும் மற்ற வற்றிற்கும் உள்ள தொடர்பை விளக்கும் உவமானமாம். உயிர் இயல்பாய் நின்று நுண்ணுடம்பும் பரு உடம்பும் [1] உண்டாவ தற்குத் துணையேதுவாய் இருப்பதோடு அவை களில் தன்னுரு மறைத்து அவற்றின் வண்ண மாய்க் கலந்து அவைகளை அசைத்தும், அவை களுக்கு வேறாகத்தான் தனித்து அசைந்தும், அவ் உடம்புகள் அழிந்தகாலத்தும்தான் அழி யாமல் மற்றெல்லாம் உடமபுகளுக்கு தலைமை காட்டியும் விளங்குவதால் அவ் அகரத்தோடு இதுவும் ஒத்த உவமையாகின்றது. உயிர்கள் வினைகளைச் செய்வதால் அவைகள் அவ்வினைப்

1 உயிர் உடம்பு முதலியனவும (சூககும உடம்புகள்) எலும்பு தோல் போர்த்த உடம்பும்.



பயனை உண்பதற்காக உடம்புகள் படைக்கப்

படுகின்றன. இல்லையானால் இறைவனுக்கு அவ்வளவு முயற்சி வேண்டுவதில்லை. ஆதலால், உடம்புகளின் படைப்புக்கு உயிர் 1 துணையேதுவாயிற்று. முன் செய்த வினைகளின் செய்கைகளே யல்லாமல் அவைகளுக்கு வேறாக அவ்வினைகளை அதிகப் படுத்தவோ அல்லது குறைத்து ஒழிக்கவோ இறைவன் வழியாகப்பெற்றதன் முயற்சியும் உயிர்களுக்கு உண்டு.

> “ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழாது உஞற்றுபவர்”[2]

என்னும் திருக்குறளும்,

---

1 உயிர் நிமித்த காரணமென்றும் கூறுவார்கள். இறைவன் உடம்பைச் செய்வானே அல்லாமல், உயிர், உடம்பை ஆக்காமையாலும், வினை துணைக்காரணமென்றால், உடம்புக்கு, முதற்காரணமென்றில்லாமை பெறுவதாலும், உடம்பே வினையாவதால் அஃதே முதற்காரண மென்று கொள்ளப் படுவதாலும், உயிர் துணைக் காரணமேயன்றி நிமித்த காரணம் அன்றென்று மறுக்க.

2 திருக்குறள், ஆள்வினையுடைமை ௧௦.



“ இம்மையின் முயற்சியாலே

இருநிதி யீட்டி யின்பம்
இம்மையே நுகர்வர் செய்தி
இலாதவர் பொருளு மின்றி,
இம்மையே இடருழப்பர்
வேறிரு வினைய துண்டேல்
இம்மையின் முயற்சி யின்றி
எய்திட வேண்டும் இங்கே"[1]

என்னும் சிவஞான சித்தியார் திருவுரையுமே இதற்குச் சான்று பகரும். ஆதலால், முன் செய்த வினையின்படி உயிர்கள் உடல்பெற்று அதன்வண்ணமாய் அறிவு திரிந்து அவ் உடலின் புலன்களிற் கழித்துக் கெடுவதானாலும், அக் கெடுதலுக்கு வேறாகவும் தான் தனித்துத் தனிமையான நன்முயற்சியையும் மேற்கொண்டு ஒழுகவல்லதாயிற்று. பரு உடம்பு அழிந்தகாலத்தில் நுண்ணுடம்புகளில் நின்று அசைந்தும், அந் நுண்ணுடம்புகளும் கழன்ற காலத்தில் தான் அழியாமல் வீடுபெற்று விளங்கியும் நிலைபெறுவதால், உயிர் அழியாததாயிற்று. நுண்ணுடம்பே அல்லாமல் பரு உடம்புக

1 சிவஞான சித்தியார் உ, எ.



ளாகிய மனித உடம்பு விலங்குடம்பு முத

லான எல்லா உடம்புகளையும் தன்வழி அடக்கி ஆளுவதால் அவ்வெல்லா உடம்புகளுக்கும் உயிர் தலைமை காட்டிற்று. உயிரின் நுண்மையும் அஃது உடலோடு பொருந்து முறையும் இயக்கு முறையும் அதற்குக் 'காற்'றென்றும் 'ஓசை'யென்றும் பொருளிருப்பதால் ஓத்தாராய்ந்து தெளிக.

"நிலம் நீர் நெருப்புயிர்[1] நீள் விசும்பு"

"வன்[2] உயிர்ச் சிறியாழ்"

என்பன திருவாசகமும் (திருத்தோணோக்கம், ரு) புறநானூறுமாம் (கஙு-அ-ச).

இன்னும் இதை இங்கு விரித்தால் இது மிகப் பெருகுமாதலால் இவ்வுரையில் பின்னால் ஏற்குமிடங்களில் நன்கு விரித்துரைக்கலாம். உயிர்க்குத் தோற்பை உடம்பாவதுபோல இறைவன் எங்குமிருப்பவனாதலால் அவனுக்கு உலகுயிர்களையே உடம்பு என்பார்கள். "அவன் எங்கும் ஊடுருவி நிற்பவனாய் விரிந்திருத்தலை ஒருங்கால் அவனது அருளாற்றல் இவ்வுலக உடம்பு முழுமையும் நுழைந்து

---

1 காற்று. 2 ஓசை.

அதற்கு ஒருகளைகணாய் நின்று அதனை இயக்கா நிற்கின்றமை இனிது புலனும்[1] என்றும்; அதற்கு விளக்க உரைக்குறிப்பாகக் கடவுளுக்கு உலகம் முழுவதும் ஒருடம்பாகலின் "இவ்வுலக உடம்பு"[2] என்றார் என்றும் வரும் மறைமலையடிகளின் திருமொழியால் இது தெளிவாக விளங்கும். இவ்வாற்றால், உடலுயிர்த் தொடர்பு அகரத்தோ டொத்து இறைவனுக்கு உவமையானது அறிந்து கொள்க. இவ் உடலுயிர்த் தொடர்பைக்

கொண்டே எழுத்துக்களுக்கு உயிரெழுத்தென்றும் மெய்யெழுத்தென்றும் ஆன்றோர் பெயரிட்டிருப்பதால் அஃது அகர உவமையோடு முழுப் பொருத்தம் உடையதென்று கொள்வது பிழையாகாது.

இறைவன் உலகுயிர்களோடு ஒன்றும் இரண்டும் அன்றாய் இரண்டறப் புணர்ந்திருக்கும் உண்மையை.

"உலகெலா மாகி வேறாய் உடனுமாய்
ஒளியாய் ஓங்கி"

[உ.—க] என்று அருணந்தி சிவமும்,

1 சிந்தனைக் கட்டுரைகள்பக்கம் உ௨.
2 „ „ அ௨.



" அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து "

என்று மறைஞான சம்பந்தரும் ஓதி யருளிய தால உணரலாம்.

மண், புனல், அனல், கால், வான் என்பவை கள் பொருள்களெனப்படுவதால் அவைகளின் கலவையான உலகும் பொருளெனப்படும். உயிர் அதனோடு தன்னுரு மறைத்து ஒளிந்த தனால் மேலடி 'உலகுக்கெல்லாம்' என்று கூறி உயிரைக் காட்டாது தன்னுள் அடக்கிச் சென்றது.

இவ்வகையாக உலகத்தோடு ஒட்டி அறிவில் லாததுபோலாகி உயிரும் பொருளெனப் பெயர் பெறவே, அவ்விரண்டோடும் இரண்டறப் புணர்ந்து தன் நிலை மறைத்துப் பொருளோடு பொருள்போலாதலால் அவனைப் 'பொருள்' என்னுஞ் சொல்லால் மேலடி சுட்டிற்று. அங் ஙனம் சுட்டியது, உலகுயிர்ப் பொருளுக்குத் தான் வேறென்று காட்டாதபடி அவ்வளவு

ஒருமையாய் இறைவன் அவைகளோடு புணர்ந் திருக்கிறான் என்று அவனது இரண்டற்ற புணர்ச்சிச் சிறப்பைக் காட்டுகின்றது.



கடவுள், உயிர், மலம் என்னும் முப்பொருள் களும என்றும் உள்ளவைக ளாதலால், இவை என்றும் ஒன்றையொன்று இவ்வாறு இரண்டறப் புணர்ந்தபடியாகவே இருக்கும் என்று உணர்தல்வேண்டும்.

இவற்றுள், கடவுள், எதைச் சேர்ந்தாலும் தன் தன்மை கெடாத முழுமுதல் ஆற்ற லுடையவர். மலம் அறிவில்லாதது. ஆதலால் உயிர்மட்டும் தன் தன்மை கெட்டுத் தான் சாரும் பொருள் வண்ணமாய்த் திரியுமென்று ஏற்படுகின்றது. ஆகவே, உயிர், ஒன்றின் சார்பை உணர்வதொழித்து, மற்றொன்றின் சார்பை உணரவேண்டியதே படைப்பின் நோக்கமல்லது அஃது எதனையும் நீக்கிவிடுவது அந் நோக்கமன்று. என்றும் பிரிவதன்றி இரண்டறப் புணர்ந்த பொருள்களை அங்ஙனம் நீக்குவதும் இயலாது.

"சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின்"

என்று உணர்தலையே சார்தலாக வைத்து நாய

ஞரும் தெளிவாக விளக்குவார்கள்.

இத் தொடர்பாலாகும் நிலை, செயல், பயன் என்னும் மற்றொன்றையும் இவ் வடி தெளிவிக்கும் முறையை இனி ஆராய்வோம்.



உலகமாகிய மலத்திலே, அம் மலமேபோல உயிர்கள் கலந்திருக்கின்றனவென்று "உலகு" என்னுஞ் சொல் விளக்குவதை மேலே நன்முய் எடுத்துக் காட்டினேம். "உலகுக்கெல்லாம் ஒரு பொருள் முதலே" என்பதில் ஆன்றோர்கள் ஆராய்வதற்குரிய மலம், உயிர், கடவுள் என்னும் மூன்று பொருள்களினும் மலத்தை 'உலகு' என்னும் சொல்லும், கடவுளைப் 'பொருள்' என்னும் சொல்லும் வெளிப்படையாய்க் காட்டுகின்றன. உயிரைப்பற்றி அவ்வாறே வெளிப்படையாய்க் கூறும் சொல் ஏதொன்றும் அதனிடத்தில் இல்லை. இல்லாமையாலும், "உலகு" என்பதுமட்டும் உயிரைத் தன்னுள் அடக்கிக் குறிப்பாகக் கூறுகின்றமையாலும், மலம் என்று உண்டோ அன்றைபிலிருந்தே உயிர் அதன் அகப்பட்டு வருந்திக்கொண்டிருக்கின்றதென்பது விளங்குகின்

றது. "உலகுக்கெல்லாம்.....முதலே" என்னும் இலேசினான்[1] இவை நெஞ்சம் இரங்கிக் கூறப்படுவதாகின்றன.

---

1 இவ்வாறு 'இலேசினால்' என்று பொருளுரைப்பது பழைய உரையாசிரியரெல்லாம் கொண்ட கொள்கை.



'இரக்கம்' என்பது பிறனொருவன் துன்பப்படும்பொழுது அறிவுடைய வேறொருவனிடம் தோன்றும் அருந்தன்மை. ஆதலால் இரக்கங் கொண்டு இலேசினாற் கூறும் இவ் வடியால் மலத்தினுள் உயிர் அகப்பட்டுக்கொண்டிருப்பதோடு வருந்திக்கொண்டும் இருக்கின்றதென்று ஏற்படுகின்றது.

இறை உயிர்களுக்கு முதல்வன் என்பதால், அவ் உயிர்களெல்லாம் தாவி விரும்பக்கூடிய ஓர் நிலையை இறைவன் உடையவனாய் இருக்கின்றான் என்பது விளங்கும். உலக வழக்கிலும், இவனுக்கு அவன் முதல்வனென்றால்,

இவனால் விரும்பப்படுவதொன்றை அவன் உடையவனாய் இருக்கின்றான் என்பது உண்மையல்லவா? அங்ஙனம் உயிர்களால் இறைவனிடம் வேண்டத்தக்கது யாது? உயிர்கள் எப்பொழுதும் துன்பத்தில் அகப்பட்டுக்கொண்டு நெளிவதால் அவ் உயிர்களால் விரும்பத்தக்கது இன்பமேயாம் என்பதும், எனவே அவ் இன்பத்தை இறைவன் உடையவனாயிருக்கிறான் என்பதும், ஆதலால்தான் அவன் உயிர்களுக்கு முதல்வன் ஆயினான் என்பதும், இவ்வளவும்



"முதலே" என்னுஞ் சொல் விளக்குகின்றதென்பதுந் தெளிவு.

உலகமே என்னும்படி அதனோடு இரண்டறக் கலந்து உயிர்கள் துன்பப்படுவதால், இன்பம் வேண்டியபொழுதும் அதைக் கொடுக்கும் இறைவனோடு இரண்டறக் கலந்தே அவ் உயிர்கள் இன்பப்படவேண்டி யிருக்கின்றன. இதை;

"ஆணவத்தோடு அத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ?"[1]

என்பது தெளிவாய் விளக்கும்.

உயிர்கள் இறைவனோடு இரண்டறக் கலக்குங்கால் அவ் வுயிர்கட்கு மலத்தின் பற்று அற்றுப்போகும். இவ்வாறு மலத்தின் வண்ணமாகிக் கிடந்த உயிர் மலத்தினின்றும் விடுபட்டு அதன் இயல்பாகிய துன்பத்தையும் ஒழித்து, இறைவனருளிலே தோய்ந்து, அதன் வண்ணமாகி, அதன் இயல்பாகிய இன்பத்தை நுகர்ந்துகொண்டு அப்படியே கிடக்கும் அந்நிலையே வீடுபேறு எனப்படுவதாம்.

---

1 தாயுமானவர் பாடல் எந்நாட் கண்ணி முத்திநிலை உ௮.

7



"அரிவையர் இன்புறும் முத்தி கந்தம் ஐந்தும்
அறுமுத்தி, திரிகுணமும் அடங்கும் முத்தி,
விரவு வினை கெடு முத்தி, மலம்போம் முத்தி,
விக்கிரக நித்தமுத்தி, விவேக முத்தி,
பரவும் உயிர் கெடுமுத்தி, சித்த முத்தி,
பாடாண முத்தி இவை பழிசேர் முத்தி
திரிமலமும் அலை உயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி இதுமுத்தித் திறத்த தாமே"1

உமாபதி சிவனார் திருமொழியைக் காண்க.

இதனால் உயிர்கட்கு மலமாய் நிற்கும் நிலையொன்றும், இறைவனாய் நிற்கும் நிலையொன்றும் ஆக இரண்டு நிலைகள் உண்டென்று தெரிகின்றது. மலமாய் நிற்கும் நிலை "தூவா நிலை"[2] யென்றும், இறையாய் நிற்கும் நிலை "தூய நிலை"[3] என்றும் வழங்குகின்றன. இந்த இரண்டு நிலைகளுக்கு ஏற்ப இரண்டு வகையான செய்கைகளும், இரண்டுவகையான பயன்களும் அவ் உயிர்களுக்கு உண்டு. இச் செயல்களையும் பயன்களையும் உய்த்துணர்ந்து கொள்க.

---

1 சிவப்பிரகாசம் உண்மை முத்தி.

2 கேவல நிலை. 3 சுத்த நிலை.



உயிர்மலத்தின் வண்ணமாய் நிற்கும், இறைவன் வண்ணமாய் நிற்கும் என்பவைகளை மலத்தின் நினைவாகவே இருப்பதும், இறைவன் நினைவாகவே இருப்பதும் என்று அறிதல் வேண்டும். மல இறை நினைவாயிருப்பதையே 'மலமாயும் உயிராயும இறை இருக்கும் என்பது' என்னும் இவ் உண்மையை;

"பத்தேது மில்லாது
என்பற்று அற நான் பற்றி நின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே
சென்றூதாய்க் கோத்தும்பீ"1

"பற்றுக பற்று அற்றான் பற்றினை அப் பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"2

என்னுந் தெய்வத் திருவாக்குகளிற் காண்க.

தலைவனாயிருக்கிறவன், தனக்குக் கீழாக உள்ளவரைத் தன் கருத்துப்படி அடக்கி ஆளுவானல்லவா? ஆகவே, உயிர்கட்கு முதல்வனாகிய இறைவனும், அவ் உயிர்களைத் தன் கருத்துப் படி அடக்கி முன்னுக்குக் கொண்டுவருகிறான் என்பது பெறப்படும். அதனால், உயிர்கள்

---

1 திருவாசகம்: திருக்கோத்தும்பீ-௯. 2 திருக்குறள்: துறவு-௧௦.



மலச்சட்டையைக் கழற்றி, அருட்சட்டையைப் பூண்டு இன்புறுகின்றன. ஆதலின் உயிர்களின் மேற் கூறிய நிலைகளும் செயல்களும் பயன்களும் அம் 'முதல' என்னுஞ் சொல்லால் வெளிப்படுதல் காண்க.

இறைவன் உயிர்களைத் தன் அருள் கருத்துப்படி அடக்கி ஆண்டு அவைகளுக்கு முதல்வனாதல்,

"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன் நான் என்றுன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டு எம்பிரான் ஆனாய்க்கு"[1]

என்னும் மாணிக்க மொழியால் மிகத் தெளிவாய் விளங்கும்.

இவ்வாறு இம் 'முதல்' என்பது உயிர்களின் நிலை செயற் பயன்களைத் தெளிவிப்பதிலிருந்து அவ் வழியாகவே கடவுளின் நிலை செயற் பயன்களையும் தெளிவிக்கின்றது. உயிர்கள் மல வண்ணமாயிருக்கும்பொழுது கடவுளும் அவ் உயிர்களோடுகூட இருந்து அவை

1 திருவாசகம்: சுட்டறுத்தல், ௨.



களைத் தன்வண்ண மாக்குவதற்காக முதலில் அம் மல உயிர்வண்ணமாக ஆகவேண்டியவனாய் இருக்கிறான். மல உயிர்வண்ணமாவது உலகமாயிருப்பது. இறைவன் இவ்வகையாக ஆவதை,

" இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமானனாய் எரியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம்முருவும் தாமேயாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர்புன் சடைஅடிகள் நின்றவாறே"1

என்று அப்பரடிகளே நன்கு வலியுறுத்துகின்றார்கள்.

மேலடியில் 'பொருள்' என்று வந்தது 'கடவுள் உலகத்துப் பொருள்களேபோல் ஆவான்' என்று அவனது ஒரு நிலையைச் சொல்லிப்போக, 'அங்ஙனம் ஆவதோடுகூட அவைகளல்லானாய் வேறாக நின்றும் அவைகளுக்கு முதல்வனாகும் அறிஞன் அவன்' என்

1 பொது சிவனெனு மோசை, உ.



னும் அவனது மற்றொரு நிலையையும் விளக்கவே அப் 'பொருள்' என்னுஞ் சொல்லின் பக்கத்திலேயே 'முதல்' என்னுஞ் சொல் நின்றதென்க இவ் விரண்டு நிலைகளுக்கும் உரிய இரண்டு செயல்களையும் பயனையுங் கண்டு

கொள்க. உயிர்களை அழியாத இன்ப வாழ்வில இருத்துவந்த அவ வருட் செயல்களின் பயனென் றறிதல் வேண்டும.

இனி, மலம் அறிவில்லாதது ஆதலால் அதற்கு ஒரு நிலையும் செயலும் பயனுங் கிடையாது. அது நின்ற நிலைப்படியே என்றுங் கிடப்பதாகும். அதன் தொடர்பால் உயிரிளிடத்தில ஆசை முதலாகிய தன்மைகள் உணடாவதால அவ் ஆசையால் உண்டாகும் உயிரின் செயலகளை மலத்தின் செயல்களாய் உரைபபது வழககம.

"ஏகமாய்த் தங்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் ஆருளொளிர இருண்ட
மோகமாய்ச் செமபிலுறு களிம்பேய்ந்து நித்த
மூலமலமாய் அறிவு முழுதினையும மறைக்கும்
பாகமாம் வகைநின்று நிரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்அது பரித்து



நாகமா நதிமதியம் பொதிசடையா னடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்குந்தானே "[1] என்பதும்
இன்னும் மலத்தைக் குறித்து வரும் இதைப்போன்ற

எல்லாத் திருவாக்குகளும் இக் கருத்தையே உட்கொண்டன. எனினும் பிறப் பெடுக்காத உயிர்களைப் பொருந்திய மலம், மிகுந்த ஆற்றலுடையதாய் நள்ளிரவு போல உயிரின் அறிவை முழுதும் மறைத்து விரைத்து நிற்கும். இறைவன் தன் அருள் ஒளியை அதில் தோய்ப்பானுல், அதனுலும், உயிரின் இயல்பான செயலாலும் அம் மலம் விடியற்கால இருள்போலப் பக்குவமாகி வரும். இறைவனருள் முழுதுந் தோய்ந்திடுமானல் பட்டப்பகலிற்போலச் சிறிதும் தோன்ருமல் அம் மலம் ஒளித்து நிற்கும்.

மலம் ஒரே நிலையதாளுலும் இறைவனருளாலும் உயிரின் செயலாலும் வெளிப்பட்டு மிகுந்தும் குறைந்தும் மறைந்தும் மாறுவதாகிய நிலையைமட்டும் அஃதுடையது என்று கூறுவது பொருந்தும்.

மலத்தால் உயிர்கள் அடையும் வேறுபாடு

---

1 சிவப்பிரகாசம்; ஆணவமும் திரோதாயியும்.

சேர்க்கி அம் மலம், ஆணவம், மாயை, இரு வினை, மாமாயை, ஆன்மம் என ஐந்தென்று பிரிக்கப்பட்டிருந்தாலும், அவ் ஐந்து மலங்களும் ஆணவம் மாயை இருவினை என மூன்றில் அடங்கி மூன்றாகவும், 'ஆணவம்' என்று ஒன்றில் அடங்கி ஒன்றாகவும் வழங்கும். இதனை:

"அநாதியில் வந்த மலம ஐந்தால் ஆட்டி"[1]

"மலமாயை தன்னொடு வல்வினை இன்றே"[2]

"இன்பம் கொடுத்தல் இறை இதனைவினை
வித்தல் மலம்"[3]

என்னுந் திருவாக்குகளால் துணியலாம்.

இவ்வாறு ஐந்து மலங்களும் ஒன்றிலடங்கிப் பொதுவாக 'மலம்' என்று வழங்குவதற்கு ஏற்பவே இவ் வடிவிலும எல்லா மலங்களுக்குப் பொதுவாக "உலகு" என்னும் ஒரு சொல பெயராக வந்தது. இவ் வொரு சொல் லைக்கொண்டே இவ்வுரையும் எல்லா மலங்களுக்கும் பொதுவாக 'மலம்' என்று அவ்வவ் விடங்களிற் கூறிக்கொண்டு வருவதால் இடங்

---

1 திருமந்திரம்: உ௨௫௪. 2 சிவஞானபோதம்: ௪0. 3 உண்மை விளக்கம்: ௩௪.

களுக்கு ஏற்றபடி அவ்வம் மலங்களுக்கும் அதனைப் பெயராகக் கொள்ளவேண்டும்.

இதுவரையில் இவ் வடிக்குக் கருத்து முறையால் பொருளாராய்ந்தோம். இதில் விடப்பட்டவைகளை இனிச் சொலமுறையால் ஆராய்வோம்.

"உலகுக்கெல்லாம்" என்பது பல்வகையான அரசுலகு, மொழியுலகு, சமய உலகு, இன உலகு[4] என்று ஒருலகத்திலேயே பிரிந்து பலபடியாக நிற்கும் இவ் உலகங்கள் எல்லாவற்றையும், இவைகளைக்கொண்ட இந்நில உலகத்தைப்போலவே இறைவன் அருள் வெளியில விளையாடிக்கொணடிருக்கும் மீன் கூட்டங்களாகிய[5] அளவில்லாத உலகங்களையும் உணர்த்தி "எவிடத்தும் எவ் உயிர்க்கும் இலங்கு சிவம் ஒன்றே" [சு. அருள் விளக்க மாலை: கூசு] என்னும் இராமலிங்க அடிகளின் திருமொழிபபடி அவ் உலகுக்கெல்லாம் ஒரு கடவுளே முதல் என்று முதனூலைப் போலவே பொது நெறியை வலியுறுத்துகின்றது.

4 சாதியுலகு. 5 நட்சத்திரக் கூட்டங்கள்.
8



‘உலகுக்கு’ ‘உயிர்’ என்று பொருள் கொள்ளும்பொழுது ‘எல்லாம்,’ என்பது உயிர்களுக்கெல்லாம் என்று பொருள் தருவதால் உயிர்கள் அளவிறந்தனவாகும் என்பதை அறிகிறோம். “பசுப பலகோடி பிரமன் முதலாய்”1 என்பது திருமந்திரம்.

“எல்லாம்” என்பது செடி கொடிகள்முதல் மக்கள் தேவர்வரையில் உள்ள உயிர்ப் பிரிவுகளை எல்லாமும் உணர்த்தும்.

“உலகெலாம்” என்பது எல்லாம்வல்ல நடமுதற்கடவுளின் அருள் வெளியிற பிறந்து, தெய்வத் திரு சேக்கிழார் பெருமானால் திருத்தொண்டர் புராணத்தின் முதற் சொல்லாக அமைந்து, அருளொளி வள்ளல் இராமலிங்க அடிகளின் மிக மிக நீண்ட அரிய விரிவுரையைப் பெற்றும், அவர்களுக்கு ஓய்வில்லாமையாலோ முழுதும் பெறாது வீறி நிற்குமானால், அஃதே உடைய இதற்குக் கண்கெட்ட ஊரோருயிங் குழல்வேனோ உரைகூறப் புகுவது?

"ஒரு" என்றதால் பலவகையாக விரிந்து கிடக்கும் உலகத்துப் பொருள்களிலே இறைவ

1 திருமூலர் திருமந்திரம் : உ0சசு.



னும் ஒரு பொருள்போலக் கிடப்பதால், உல கத்துப் பொருள்களுக்கும் இறைவனுகிய பொருளுக்கும் வேறுபாடு தெரிவிக்க "ஒரு பொருள்" என்று அடைமொழியாகக் கூட்டிக் 'கடவுள் உலகுப் பொருள் போல்வதன்று, அஃது ஒப்பற்ற பொருளாகும்' என்பதை விளக்குகின்றது. 'எலலா உலகங்களுக்குங் கடவுள் ஒருவரே' எனபதற்காக எணணுப் பொருளில வந்ததெனவுங் கொள்க.

அறிவுடையதென்று எடுத்துக்கொண்ட உயிர்ப் பகுப்பு ஆண பெண் என்னும் இரு பிரிவை உடையதாதலால, அறிவுடையதாகிய கடவுளும் ஆண் பெண் என்னும் இரு பிரிவை உடையது என்பது பெற்று, அப்படிக் கடவுள் இரண்டு பிரிவினதானாலும் உயிர்களுக்கு அவ் ஆண் பெண் உருக்கள் வேறு வேறாக இருப்பதுபோல் அல்லாமல, கடவுளுக்கு இரண்டுருவும் ஒருருவாய் ஓரே பொருளென ஒன்றாய் இருக்கும் என்று தெரிவிப்பதற்காக "ஒரு பொருள்" என்று வந்தது எனலும பொருந்தும். முதனூலில் "ஆதி பகவன்" என்று கடவுளின் ஆண் பெண் நிலையைக் குறிப்பால்



உணர்த்தி இருபெய ரொட்டுப் பண்புத் தொகையாக ஒரு பெயராய்க் கடவுளுக்கு வந்ததும் இங்கு நினைவு கூரத்தக்கது.

'மலை' என்றொருவன் சொல்லுவானானால் அச் சொல்லின் எழுத்து, எழுத்தெண், வரி வடிவு, ஒலி வடிவு முதலாகிய எதோன்றுந் தோன்றாமல், அதன் பொருளாகிய கற்பாறை யும் முட்செடியுங் கலந்து நிற்கும் ஒரு மண் மேடு சொல்பவன் மனத்திலுங் கேட்பவர் மனத்திலும் அவ் விநாடியிலே தோன்றுதல் போல 'உலகு' என்றும் 'உயிர்கள்' என்றும், அவற்றின் செயலென்றும் ஒருவர் சொன்ன அளவிலேயே அல்லது கேட்ட அளவிலேயே அவ் உலகுயிர்களைப்பற்றித் நினையளவும் தம முடைய நெஞ்சத்தில் நினையாமல், அவற்றின் பொருளாய் விளங்கும் இறைவனையே எண் ணும் பக்குவத்தை அடைவதே அவ் இறைவ னோடு ஒன்றாகி இன்பூறும் நிலைதரும் என்று உயிர்கள் கடைசியில் பெறவேண்டிய 'மெய்

---

1 சிறப்புப் பெயரும் பொதுப்பெயரும் ஒரு பொரு ளுக்கு வருங்கால், அவ் இரு பெயர் நடுவே 'ஆகிய' வென்னும் பண்புருபு தொக்கு நிற்பது.

யுணர்வு நிலை'யைப் "பொருள்" என்றது வலி யுறுத்தும என்க.

சொல்லுக்குப் பொருள் என்பதுபோல உலகுக்குப் பொருள் இறைவன் என்று கொள்க. "பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்க மற நிறைகின்ற பரிபூர ணானந்தமே" என்று தாயுமானச் செல்வராலும் இவ் உண்மை நன்கு காட்டப்பட்டது. "ஒரு மொழி யொழி தன் இனங்கொளற் குரித்தே"[1] என்னும் நன்னூற் சூத்திரப்படி 'பார்க்குமிடம்' என்றதைக் கொண்டு அதன் இனமாகிய 'கேட்குமிடம்' 'முகருமிடம்' 'சுவைக்குமிடம' 'ஊறுமிடம்' 'நினைக்குமிடம்' 'ஆராயுமிடம்' தெளியுமிடம்' 'உணருமிடம்' ஆகிய எல்லாவற்றையுங் கொண்டு அவ்விடங்களிலெல்லாம் இறைவ னுணர்ச்சி ஒன்றே நீக்கமற நினைக்கப் பழகு தல் வேண்டுமென்று தெளிக.

ஆகவே, "பொருள்" என்பது இங்குக் கடவுட்குப் பெயராய் வந்து, உயிர்கள் வீடு பெறுவதற்கு அடையவேண்டிய மெய்யுணர்வு

---

1 பொதுவியல் : எ.

நிலையையும், அதை அடைய இவ்விவ்வாறு பழகவேண்டுமென்பதையும் அறிவுறுத்திப் போகின்றதென்க.

இன்னும, உலகமும் உயிரும் தம் முதல் கெடாமல எப்பொழுதும் இருப்பவைகளாயினும், அவைகள் தோன்றுதலும், தோன்றிச் சிலகாலம் இருத்தலு , பின்பு மறைதலுமாகிய மூன்று தொழிலிற்பட்டு நிலை மாறுவதால அவைகளைப் பொய்ப் பொருள்கள் என்று சொல்லுகிறோம். எனவே, அங்ஙனம் நிலைமாறாது கிடக்கும் இறைவன் 'மெய்ப் பொருள்' எனப்படுகிறான். "பொருள்" என்னுஞ் சொல் 'மெய்'யை உணர்த்தும் என்று முன்னமே விளக்கப்பட்டிருககின்றது. ஆகவே, 'உலகுயிர்களைப்போல் முத்தொழிலிற்படாமல எபபொழுதும ஒரு நிலையிலேயே இருந்தருளும் உண்மைப் பொருளானவன் இறைவன்' என்று அவனது நிலையுண்மையை அறிவிப்பதற்காகவும் "பொருள்" என்பது கடவுளுக்குப் பெயராய் வந்ததென்க. சிலப்பாரத்தில் "பொருளன்"[1] என்றதற்கு "உண்

---

[1] நாடு காண் காதை: கள்க.

மைப்பொருளா யுள்ளவனெனவுமாம்" என்று அடியார்க்கு நல்லார் உரை கூறியதுங் காண்க.

"முதல்" என்பதற்கு 'இடம்' என்றும் பொருளாதலால் 'எல்லா உயிர்களுக்கும் புகலிடமாய் விளங்குவான் இறைவன்' என்னும் உண்மையை அது விளக்குகின்றது. 'முதல்' என்பது 'இடம்' என்று பொருள்படுவதை:

"சாரமுதல் சேர்ந்த சில்வளை விரலி"[1]

"மன்னவன் வாய்முதல் தெறித்தது மணியே"[2]

என்பனவைகளிற் காண்க. 'முதன்மை' அல்லது 'இன்றியமையாமை'' என்னும் பொருளையுந் தந்து, படைத்த இறந்தகாலத்திலும், அழிக்கும் எதிர்காலத்திலும் அன்றி, நிகழ் காலத்திலும் "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்பதையும் விளக்கி, அவ்வழியாகவே 'தவஞ்செய்து தன்னைத்தான் உணர்தலே வீடுபேறும்: இதற்கு இறைவனும் அவனருளும் எதற்கு? என்பது முதலியவாகப் பல படி எழும்பும் பொய்ம்மதங்களையெல்லாம் மறுக்கின்றது.

---

1 புறநானூறு: சுo. 2 சிலப்பதிகாரம்: உo, எஉ.

"ஏ"காரம், கடவுளே தலைவன் என்று தெளிவுபடுத்த வந்தது.[1]

"உலகுக்கெல்லாம் ஒரு பொருள் முதலே" என்பதில் முதலில் வரும் 'உலகு' என்பது மலத்தையும், அதிற் கிடந்து வருந்தும் உயிரை யுங் குறிக்குஞ் சொல். கடைசியில் வரும் "முதலே" என்பது கடவுளுடைய முழு முதல் இன்பத் தன்மையை உணர்த்துஞ் சொல். இவற்றின் இடையில் உள்ள 'எல் லாம்' என்பது பல உயிர்களையும் தெரிவிப் விப்பது. 'ஒரு' இறைவனருளாகிய அம்மை யைக் காட்டுங் குறிப்புச் சொல. 'பொருள்' என்றது கடவுளைச் சுட்டுஞ் சொல். எனவே, மலத்திற் கிடக்கும் உயிர்கள் அறிவு நிலை பெற்று, அருள் வண்ணமாகி, இறைவனைச் சார்ந்து, இன்ப மடையும் என்னும் அவற்றின் வழிகளையும், உயிர்கள் முதலில் மலத் துன் பத்திற் கிடக்குமென்பதூஉம், கடைசியில் இன்ப வாழ்வில் வாழுமென்பதூஉம் பெறப் படுகின்றன. இம் முறையை:

1 இவ் 'எ.காரத்தைத் 'தேற்றம்' என்பர்.



" மாயகட் டோரையும்,
மாயா மலமெனு மாதரையும்
வீயவிட்டு ஓட்டி
வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன் சென்று பின்
தாதையைக் கூடிப்பின் தாயை மறந்து
ஏயுமதே நிட்டையென்றான்
எழில் கச்சி யேகம்பனே "

என்பதிற் காண்க.

இதை இன்னொரு முறையாலுங் காண்கிறோம்: அத் திருமொழியில ஐந்து மொழிகள் உள்ளன. அவைகளில முதல நான்கும் அறிவிலலாத சொற்பொருளாகவும், கடைசியில் உள்ள 'முதல' என்பது மட்டும் முழு அறிவுள்ள சொற்பொருளாகவும் அமைந்திருக்கிறது.

'முதன்மை' என்பது அறிவின் தன்மை

யாதலால் அஃது அறிவோடு கூடியதாயிற்று.

அறிவில்லாத முதற் சொலலாகிய "உலகு" என்பதில மறைந்து உடனாக உள்ள உயிர் அதிலிருந்தும் பெயர்ந்து பக்கத்திலே வரவா



அறிவில் படிப்படியாக உயர்ந்து நிற்கும்சொற் களோடெல்லாம் ஒன்றாகிக் கலந்து கலந்து, அவைகளையும் விட்டுப் பெயர்ந்துகொண்டே வந்து, கடைசியில் முழு அறிவுச் சொல்லாய் விளங்கும் "முதல்" என்பதோடு சேர்ந்து பேரறிவை உடையதாகின்றதால் இவ் வடி, உயிர்கள் அறியாமை கழன்று அறிவு உடைய வாய் ஆகும் முறையை இனிது விளக்கிக் கொண்டு செல்லும். இவ் வழகு யாவராலும் அறிந்து இன்புறக்கூடியது.

இனி, இவ் வடி முதனூலோடு பொருந்து மாறும் அழகு உடையது:

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"[1]

என்பது முதனூல்.

"உலகுக் கெல்லாம் ஒரு பொருள் முதலே"
என்பது இந்நூல்.

"அகர முதல எழுத்தெல்லாம்" என்னும் உவமை, "உலகுக்கெல்லாம்" என்பதிலிருந்து

---

1 திருக்குறள்: கடவுள் வாழ்த்து: க.



முன்பு பிரித்து எடுத்துக்காட்டிய 'உடலுயிர்த் தொடர்பில்' "உயிரின் முதல உடம்பெல்லாம்" என்னும் உவமையாக அடங்குகின்றது. "ஆதி பகவன்" என்பது "ஒரு பொருள்" என்பதையும், "முதற்றே" என்பது "முதலே" என்பதையும், "உலகு" என்பது "உலகு" என்பதையும் உட்கொண்டிருப்பது காண்க.

கண்ணுக்குத் தெரிந்த உலகத்தைக் கொண்டு, கண்ணுக்குத் தெரியாத கடவுளுண்மையைக் காட்டுவதே இவ் வடியின் முதன்மையான கருத்து. அம் முகத்தால் உலகுயிர்களின் உண்மையையுங் காட்டி, உயிர் அடைய வேண்டிய நாற்பொருள்களையும் தெளிவிக்கின்றது. இங்ஙனம் நூற் பொருள்களையெல்லாம் குறிப்பாகக் காட்டுவதும் வாழ்த்தின் இலக்கணமென்பது ஆசிரியர் சிவஞான

யோகிகளின் கருத்து.[2]

இவ்வளவும் இம் முதலடிக்கு விரித்து உரை கூறியதுபோல மற்ற அடிகளுக்குங் கூறினால் இது மிகவும் நீண்டுபோய்ப் படிப்பவர்

---

2 சிவஞானபோதம்: மங்கல வாழ்த்து.



கள் உணர்வைச் சலிக்கச் செய்யு மாதலால், அங்ஙனம் செய்யாமைப் பொருட்டு மற்றவைகளுக்கு உரை சுருக்கி உரைக்கப்படும். இங்கு உரைத்தது கொண்டு அவைகட்கும் உரை விரித்து உணர்ந்துகொள்க.

இஃது அகவலோசையால் முடிந்த நாற்சீர் ஓரடி. இந் நூல் முழுதும் உள்ள எல்லா அடிகளுக்கும் இதுவே இலக்கணமாமென்க.

குட்டிக்குறளின் முதலடிக்கு
திரு இளவழகனார் எழுதிய
விருத்தியுரை முற்றுப்பெற்றது.

---

